29th September 1958]

THE HON. SRI C. SUBRAMANIAM: Sir, I introduce the Madras District Boards (Amendment) Bill, 1958, and request that it may be taken up for consideration in the afternoon.

The Bill was introduced.

### III.—GOVERNMENT MOTIONS—*cont.*

### (2) AMENDMENT OF SCHEDULE V TO THE MADRAS DISTRICT BOARDS ACT, 1920.

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON: Mr. Speaker, in the Madras District Boards Act, 1920, as it stands at present, there is no provision enabling the district boards to utilise their funds for medical education. One of the district boards recently proposed to utilise its funds for the establishment of a medical college. It is considered necessary to permit the utilization of district board funds towards medical education. It is accordingly proposed to amend Schedule V to the Act so as to enable district boards to utilize their funds for medical education. So, I move the following motion—

"That the following draft rule proposed to be made by the Governor of Madras in exercise of the powers conferred by section 201 of the Madras District Boards Act, 1920 (Madras Act XIV of 1920), altering Schedule V to that Act, be approved."

*Draft Rule.*

In the said schedule, the following rule shall be inserted as rule 2, namely :—

"2. A district board shall have power to contribute towards the expenses of establishment of a medical college or school within the district or to itself establish a college or school."

The motion was put and carried.



### IV.—GOVERNMENT BILLS—*cont.*

### (2) THE MADRAS PANCHAYATS BILL, 1958 (L.A. BILL NO. 33 OF 1958)—*cont.*

Clause 67 was put and carried.

*Clause* 68.

MR. SPEAKER: The motion is—

"That clause 68 do stand part of the Bill."

SRI M. S. SELVARAJAN: பஞ்சாயத்து மசோதாவின் 68-வது பிரிவில் சில பஞ்சாயத்துகள் கூட்டாகத் தங்களுக்கு வேண்டிய குடி தண்ணீர் வசதி, மற்றும் வேறு வசதிகளை அமைத்துக் கொள்ள வகை செய்யப்பட்டிருக்கிறது.

[Sri M. S. Selvarajan] [29th September 1958

கிணற்று வசதியைப் பொருத்தவரையில், இரண்டு பஞ்சாயத்துக்களுக்குப் பொதுவாக இருக்குமென்று நாம் நினைக்கவில்லை. பெரும்பாலான பஞ்சாயத்துகளுக்கு தனித்தனியாகவே கிணற்று வசதி அமைந்துவிடும். ஆனால் ஓவர்ஹெட் டாங்க் மூலமாகவோ, ஆற்றுத் தண்ணீர் மூலமாகவோ, **Comprehensive water-supply scheme, projected water-supply scheme** என்ற திட்டங்களின் மூலமாகவோ ஒன்றுக்கு மேற்பட்ட பஞ்சாயத்துகளுக்கு இந்தத் திட்டமானது நிறைவேற்றப்பட்டு வருகிறது. நிறைவேற்றப்படாத இடங்களில் கூட குடி தண்ணீருக்கு வசதி செய்வதற்காகத்தான் கூட்டாக சில பஞ்சாயத்துகள் சேர்ந்து செய்வதற்கு வழிவகை செய்யப் பட்டிருக்கிறது. இது வரையிலும் நிறைவேற்றப்பட்டிருக்கிற திட்டங் களிலேயும் சில இடங்களில் **Comprehensive water-supply scheme** நிறை வேற்றப்பட்டு வந்திருக்கிறது. பெரிய திட்டங்களுக்குக் கூட **rural water-supply scheme**-ஐப் பொறுத்தவரையில், கட்டுமான செலவை அரசாங்கமே பொறுப்பாக ஏற்றுக்கொண்டு சில திட்டங்களை நிறைவேற்றப்பட்டிருக்கின்றன. செலவு முழுவதையும் அரசாங்கமே ஏற்றுக்கொண்டிருக்கக்கூடிய இடங் களில் நிர்வாகச் செலவை அந்தந்தப் பஞ்சாயத்துகளே ஏற்றுக்கொள்ள வேண்டுமென்ற வகையில் வழி செய்யப்பட்டிருக்கிறது. கட்டுமானச் செலவை பஞ்சாயத்துகளே ஏற்றுக்கொண்டிருக்கக்கூடிய இடங்களில் ஒருவகையாக இருக்கிறது. வீடுகளுக்கு தனித்தனியாக குழாய் வைத்துக் கொடுத்திருக்கிற இடங்களில் கட்டுமானச் செலவை விட்டு சொந்தக்காரர்களே ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று வழி செய்யப் பட்டிருக் கிறது. இது வீட்டுத் தீர்வை என்ற இனத்தின் கீழ் வசூலிக்கப்பட்டுவருகிறது. வாட்டர் டாக்ஸ் என்ற உப இனத்தில் கீழே, வீட்டுத் தீர்வை என்ற பணத் தின் பெயரால் இது வசூலிக்கப்படுகிறது. இந்தப் பிரிவிலாவது, அல்லது பிற்பட்டு வரும் பிரிவிலாவது, இதுபோன்று நிறைவேற்றப்படு கின்ற குடி தண்ணீர் திட்டங்களுக்காக எந்த இனத்தில் கீழே நிர்வாகச் செலவை ஏற்றுக் கொள்ளவேண்டுமென்று திட்டவட்டமாக வழி செய்யப் படவில்லை என்று நான் கருதுகிறேன். நான் தெரிந்து கொண்ட வரையில் வீட்டுத் தீர்வை என்ற இனத்தின் பெயரால், வீட்டுத் தீர்வையின் அடிப்படை யிலே இந்தத் தீர்வையும் வசூலிக்கப்பட்டு வருகிறது. வீட்டுத் தீர்வை என்ற அடிப்படையில் வசூலிக்கப்படுகிறது என்று சொல்லும்பொழுது, சாதாரணமாக 4 அணா தீர்வை வசூலிக்கிற ஒரு குடிசை வீட்டுக்கு, 10 நபர்கள் இருக்கிற இடத்தில், தண்ணீர் உபயோகிப்பதற்காக, 100-க்கு 100 தீர்வை கூடுதலாக வசூலித்தாலும், கூடுதலாக இன்னும் 4 அணா வசூலிக்கப்பட்டு, அது இந்த "maintenance charge"க்காக ஈடு செய்யப்பட்டு வருகிறது. அதே நேரத்தில் பெரிய வீடுகளில் 2 அல்லது 3 பேர்கள் இருந்தாலும், வீட்டுத் தீர்வை எவ்வளவு வசூலிக்கப்படுகிறதோ அதே அடிப்படையில் தண்ணீர் தீர்வை வசூலிக்கப்படுகிறது. எண்ணிக்கைக் கூடுதல் குறைவைப் பொருத்து இராமல் இந்தத் தீர்வை வசூலிக்கப்படுகிறது. பெரிய பஞ்சாயத்து ஆனாலும் சரி, சிறிய பஞ்சாயத்து ஆனாலும் சரி, எவ்வளவு தண்ணீர் உபயோகிக்கிறார்களோ, அந்த அளவுக்கு தீர்வை நிர்ணயிக்கப்பட வேண்டும். ஆகவே அடிப்படையிலேயே கோளாறு இருக் கிறது என்பது என்னுடைய கருத்து. இந்தக் கோளாறை நீக்கும் வகை யில் பழைய பஞ்சாயத்து சட்டத்திலும் கூட எந்தவிதமான பரிகாரமும் காணமுடியவில்லை. இது போன்ற நீர் நிலையங்கள் சம்பந்தப்பட்ட வரை, கூட்டுத்திட்டமானாலும் சரி, தனித்தனித் திட்டமானாலும் சரி, ஓவர்ஹெட் டாங்க் மூலம் தண்ணீர் சப்ளை செய்தாலும் சரி, இந்தத் தீர்வையை எந்த அடிப்படையில் வசூலித்து, அதற்கான பராமரிப்புச் செலவை ஏற்றுக் கொள்வது என்று பழைய பஞ்சாயத்து சட்டத்திலும் கூட வழிவகை செய்யப் படவில்லை. கடைசி நேரத்தில் இது பரிசீலனையில் இருந்தது. இப்பொழுது நாம் நிறைவேற்றும் பஞ்சாயத்துச் சட்டத்திலும் சரி, இது தெட்டத் தெளி வாக வரையறுக்கப்படவில்லை. இதுபோன்ற திட்டங்கள் சம்பந்தப்பட்டவரை யில், கூட்டுத்திட்டமாக இருந்தாலும் சரி, தனித்தனித் திட்டமாக இருந்தா லும் சரி, எந்த அளவுக்கு தண்ணீரை உபயோகப்படுத்துகிறார்களோ, அந்த அளவுக்கு ஈடு செய்யவேண்டும், அந்த அடிப்படையிலே தீர்வை செலுத்தப்படவேண்டும், அதற்குத் தகுந்த முறையில் வழி செய்யவேண்டு

29th September 1958] [Sri M. S. Selvarajan]

மென்று கேட்டுக்கொள்கிறேன். வீட்டுத் தீர்வை அடிப்படையிலே இந்தத் தண்ணீர்த் தீர்வையையும் வசூலிப்பது நியாயமாகாது. மாற்று வழி கண்டுபிடித்துத்தான் ஆகவேண்டும். ஜனத்தொகை அடிப்படையில், உபயோகப்படுத்துகிறவர்களுடைய தண்ணீர் அளவுக்குத் தகுந்தவாறு, இந்தத் தீர்வையை வசூலிக்கவேண்டுமென்று இந்த கிளாஸிலாவது அல்லது பின்னர் வசூலிக்கக் கூடிய விதிகளிலாவது வரையறுக்கவேண்டு மென்று கேட்டுக் கொள்கிறேன்.

Clause 68 was put and carried.

*Clause* 69.

MR. SPEAKER : The motion is—

"That clause 69 do stand part of the Bill."

*SRI A. GOVINDASAMY : பொது ரோடுகளுக்கும், பொது இடங்களுக்கும் அரசாங்கம் உத்திரவு போட்டு, பஞ்சாயத்தோ, பஞ்சாயத்து கவுன்சிலோ நிறைவேற்றுகிற நிலைமை ஏற்பட்டால், அந்தச் செலவை அரசாங்கம் ஏற்கவேண்டுமென்று விதிக்குப் பதிலாக, அரசாங்கத்தினுடைய உத்திரவுப் பிரகாரம் இருக்கலாம் என்கிற முறையிலே இந்தப்பிரிவிலுள்ள புரொவிஸோவில் இருக்கிற காரணத்தினால், அதை நீக்கவேண்டு மென்று கேட்டுக்கொள்ளுகிறேன். அரசாங்கம் ஏற்கனவே எஸ்டிமேட்டை அப்ரூவ் செய்து போட்ட பிறகு, அது சரியானதா என்று மறுபடியும் பரிசீலிக்கவேண்டிய அவசியம் கிடையாது. ஆகவே இந்த புரொவிசோவினால் இடையூறு ஏற்படலாம். விளக்குப் போட்ட பிறகு அரசாங்கம் ஏற்றுக் கொள்ள முடியாது என்ற நிலைமை ஏற்பட்டால், பஞ்சாயத்தோ, பஞ்சாயத்து யூனியனோ ஏற்றுக்கொள்ள முடியாத நிலைமை ஏற்படும். ஆகவே இந்த புரொவிசோவுக்கு அவசியமில்லை என்று கருதுகிறேன். அரசாங்கத்தின் சார்பிலேயே ஒரு திருத்தம் கொண்டுவந்து இதை நீக்கவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM: இதையெல்லாம் கவனித்துத்தான் அரசாங்கம் உத்தரவு போடும். ஆகவே நீக்கவேண்டிய அவசியமில்லை.

Clause 69 was put and carried.

*Clause* 70.

MR. SPEAKER : The motion is—

"That clause 70 do stand part of the Bill."

SRI N. K. PALANISAMI : Sir, I move "In the clause *omit* the words 'common dispensaries' occurring in line 37."

ஏற்கனவே ஜில்லா போர்டுகள் நடத்திவந்த ஆஸ்பத்திரிகள் எவ்வாறு நடந்தன என்பது நமக்கு நன்றாகத் தெரியும். பல ஆஸ்பத்திரிகளிலே டாக்டர்கள் இருப்பதே கிடையாது. பல ஆஸ்பத்திரிகள் மாதக் கணக்கில் டாக்டர்கள் இல்லாமல் இருந்திருக்கின்றன. அது மட்டுமல்ல. போதுமான மருந்துகளும் கிடையாது. வயிற்றுவலியானாலும் சரி, தலைவலியானாலும் சரி, ஒரே மருந்துதான். பல இடங்களிலே ஊழல்கள் ஏற்பட்டு, அதன் காரணமாக ஆஸ்பத்திரிகள் சரிவர நடைபெறவில்லை. ஜில்லா போர்டினாலே நிர்வகிக்க முடியாத ஆஸ்பத்திரிகளை இரண்டு, மூன்று பஞ்சாயத்து யூனியன்கள் சேர்ந்து எப்படி நடத்த முடியும் ? பஞ்சாயத்துகளைப் பற்றியோ, பஞ்சாயத்து யூனியன்களின் நிதி நிலைமையைப் பற்றியோ நமக்கு திட்டவட்டமாகத் தெரியாது. அப்படியிருக்கும்பொழுது இந்த ஆஸ்பத்திரிகள் நடத்துவதை பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலுக்கு விட்டுவிட்டால், தன்னுடைய தொகுதி, தன்னுடைய பஞ்சாயத்து கவனிக்கப்படவில்லை

என்று விருப்பு வெறுப்பு ஒரு பக்கமும், நிதி நிலைமை மோசமாக இருந்தால், அதனால் இருக்கக்கூடிய ஆஸ்பத்திரிகள் நடத்த முடியாமல் போகக் கூடிய அபாயமும் ஏற்படும் ஆகவே சர்க்கார் இந்த ஆஸ்பத்திரிகளை ஏற்று நடத்த வேண்டும், அல்லது ஜில்லா மெடிகல் ஆபீஸர்களின் கீழே இந்த ஆஸ்பத்திரிகளை நடத்தப்படவேண்டும். என்னுடைய இந்தத் திருத்தத்தை எடுத்துக்கொள்ளுமாறு கேட்டுக்கொள்ளுகிறேன்.

The amendment was duly seconded.

MR. SPEAKER : The clause and amendment are before the House for discussion.

THE HON. SRI C. SUBRAMANIAM : இதெல்லாம் விவாதிக்கப் பட்டு டிஸ்பென்ஸரியைப் பொறுத்தவரையில் பஞ்சாயத்து யூனியன் நடத்தவேண்டும் என்று தீர்மானிக்கப்பட்டது. அதிலே இரண்டு பஞ்சாயத்து யூனியன்கள் சேர்ந்து காமன் டிஸ்பென்ஸரிஸ் நடத்தலாம் என்றும் குறிப்பிடப்பட்டிருக்கிறது. அதை எடுத்துவிடவேண்டுமென்று சொல்கிறார்கள். அதை ஒத்துக் கொள்ளுவதற்கு இல்லை.

The amendment was put and lost.

Clause 70 was put and carried.

*Clause* 71.

MR. SPEAKER : The motion is—

" That clause 71 do stand part of the Bill."

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I move—

(i) " *Re-number* clause 71 as sub-clause (1) of that clause and in the heading to that clause for the words ' from panchayat union council ' *substitute* ' management of institutions, execution or maintenance of works, etc.' "

(ii) " *After* sub-clause (1) of clause 71 as re-numbered, *add* sub-clause (4) of clause 72 as sub-clause (2)."

The amendment was put and carried.

Clause 71, as amended, was put and carried.

*Clause* 72.

MR. SPEAKER : The motion is—

" That clause 72 do stand part of the Bill."

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I move—

" In clause 72, *omit* sub-clause (4)."

This sub-clause has been added to the previous clause.

* SRI A. GOVINDASAMY : இப்பொழுது பஞ்சாயத்திலே இருக்கிற அன்ரிசர்வர்டு பாரெஸ்டுகளுடைய வருமானத்தை கலெக்டர் விரும்பினால் எடுத்துக் கொள்ளலாம் என்ற நிலைமை இருக்கிறது. அதை நீக்கவேண்டும். கிளாஸ் 72 (1) (பி)-யில் குறிப்பிட்டிருக்கிற வாசகத்தை நீக்கவேண்டுமென்று திருத்தத்தை ஸ்ரீ எம். பி. சுப்பிரமணியம் கொடுத்

29th September 1958] [Sri A. Govindasamy]

திருக்கிறார்கள். ஆனால் அந்த அங்கத்தினர் தற்சமயம் சபையில் இல்லாத தன் காரணத்தினால், அந்தத் திருத்தம் பிரேரேபிக்கப்படவில்லை. முக்கியமாக பஞ்சாயத்துகளுக்கு வரவேண்டிய வருமானத்தை சர்க்கார் எடுத்துக் கொள்ளக்கூடாது. அதனால் பஞ்சாயத்துக்களுடைய வருமானம் குறையும். ஆகவே, இந்த ஷரத்தை நீக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : இந்த 'b' பகுதி பஞ்சாயத்து வருமானத்தை எடுத்துக்கொள்ளுவதற்காக இல்லை.

In respect of every forest so vested, the panchayat shall, if so required by the Collector, pay to the Government such rent as the Collector, may, from time to time, subject to the control of the Board of Revenue, fix in this behalf.

என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. இதிலே ஏதாவது ரெண்ட் கொடுக்க வேண்டுமா என்பதை பற்றி தான் இங்கே கூறப்பட்டிருக்கிறது. அவசியமான இடங்களில் ரெண்ட் குறைக்கப்படும் அல்லது ரெண்ட் இல்லாமலும் விடக்கூடும்.

The amendment was put and carried.

Clause 72, as amended, was put and carried.

*Clause* 73.

MR. SPEAKER : The motion is—

" That clause 73 do stand part of the Bill."

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I move—

" In clause 73, *after* sub-clause (2), *add* the following sub-clause :—

' (3) The management and superintendence of any charitable endowment which immediately before the constitution of a panchayat union council for any panchayat development block under this Act was vested in a district board under the Madras District Boards Act, 1920 (Madras Act XIV of 1920) shall, on such commencement, vest in the panchayat union council exercising jurisdiction over the place where the endowment is situated.' "

The amendment was put and carried.

Clause 73, as amended, was put and carried.

Clauses 74 to 77 were put and carried.

*Clause* 78.

MR. SPEAKER : : The motion is—

" That clause 78 do stand part of the Bill."

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I move—

" In clause 78—

' (i) *for* the words ' it shall be the duty of the panchayat to provide at the cost of the panchayat to such extent as the Government may by general or special order direct ' *substitute* ' the panchayat may, and if so required by the Government shall, make provision '; and

[Sri C. Subramaniam] [29th September 1958

(ii) *add* the following at the end—

' Provided also that where the execution of any work is required by the Government, the Government shall make such provision for the cost thereof.' "

The amendment was put and carried.

Clause 78, as amended, was put and carried.

(Deputy Speaker in the Chair.)

*Clause* 79.

DEPUTY SPEAKER : The motion is—

" That clause 79 do stand part of the Bill."

Sri Annamalai will move his amendment.

THE HON. SRI C. SUBRAMANIAM : The principle of the amendment has been negatived many times.

DEPUTY SPEAKER : Because the House has already given its verdict against the principle, the hon. Member cannot move the amendment.

Clause 79 was put and carried.

Clauses 80 and 81 were put and carried.

*Clause* 82.

DEPUTY SPEAKER : The motion is—

" That clause 82 do stand part of the Bill."

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I move—

" (i) *Re-number* clause 82 as sub-clause (1) of that clause, and in sub-clause (1) as re-numbered *for* the expression ' section 85 or section 86 ' *substitute* ' section 86 or section 87 '."

" (ii) *after* sub-clause (1), *add* the following as sub-clause (2) :—

' (2) It shall be the duty of the karnam of every revenue village to report on encroachments on properties vested in panchayats or panchayat union councils, to the executive authority or the Commissioner concerned and to the officers of the Revenue Department, and it shall be the duty of the executive authority or the Commissioner concerned to institute proceedings under this Act and secure the removal of the encroachments within such time as may be specified by the Government by general or special order. If the removal of the encroachments has not been secured within the period specified in such order, the officers of the Revenue Department shall institute proceedings under the Madras Land Encroachment Act, 1905 (Madras Act III of 1905) and secure such removal '."

The amendment was put and carried.

Clause 82, as amended, was put and carried.

29th September 1958]

*Clause* 83.

DEPUTY SPEAKER : The motion is—

" That clause 83 do stand part of the Bill."

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I move—

(i) In clause 83 *after* the words ' or income ' *insert* ' including any fishery rights '."

(ii) " *For* the words ' of lands of a particular description or of lands under a particular source of irrigation ' *substitute* ' of the holders of lands of a particular description or of the holders of lands under a particular source of irrigation '."

SRI A. GOVINDASAMY : தனிப்பட்டவர்கள் குளங்கள் நீங்கலாக, பொதுக் குளங்கங்களில் வருகின்ற மீன் வருமானத்தை பஞ்சாயத்துகளுக்கு கொடுப்பது போலவே, விழல் மூலம் அதாவது கோரை முதலியவைகள் மூலம் வரும் வருமானத்தையும் கொடுக்கவேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

The amendment was put and carried.

Clause 83, as amended, was put and carried.

*Clause* 84. 10-40 a.m.

DEPUTY SPEAKER : The motion is—

" That clause 84 do stand part of the Bill."

THE HON. SRI C. SUBRAMANIAM : Mr. Deputy Speaker, Sir, I move—

" *Re-number* clauses 84 to 88 as clauses 85 to 89 respectively, and *insert* clause 89 as clause 84."

The amendment was put and carried.

Clause 84 as re-numbered was put and carried.

*Clause 85 as re-numbered.*

DEPUTY SPEAKER : The motion is—

" That clause 85 do stand part of the Bill."

THE HON. SRI C. SUBRAMANIAM : Mr. Deputy Speaker, Sir, I move—

In clause 85 as re-numbered—

(i) *for* the heading *substitute* the following heading—

" *Maintenance of Irrigation works, execution of Kudimaramat, etc.*";

(ii) in sub-clause (1) *after* the words ' to any panchayat ' *insert* ' or to any panchayat union council ';

(iii) in sub-clause (2), *after* the words ' The panchayat ', *insert* ' or the panchayat union council '.

[Sri C. Subramaniam] [29th September 1958

(iv) *After* sub-clause (2), *add* the following :—

' (3) Where the maintenance of any irrigation work is transferred under this section, the fishery rights of Government in such work shall be transferred to and be vested in the panchayat or the panchayat union council as the case may be subject to such terms and conditions including terms and conditions regarding the utilization of the income, as may be specified by the Government.'

SRI A. R. SUBBIAH MUDALIAR : I want a clarification regarding the clause we are discussing.

THE HON. SRI C. SUBRAMANIAM : It is clause 84 re-numbered as 85.

SRI M. S. SELVARAJAN : தலைவர் அவர்களே, உத்தேச திருத்தத்தின் காரணமாக விதிப் பிரகாரம் கூட, நீர்ப்பாசன சம்மந்தமான பொறுப்புகள் பஞ்சாயத்துகளிலோ, யூனியன்களிலோ, விடப்படுவதற்கு அதிகாரம் அளிக்கிறோம். இதில் அதிகாரத்தை விட்டுத்தான் ஆகவேண்டும் என்று இல்லாமல், விட்டாலும் விடலாம் என்ற முறையில், சர்க்காரே அதிகாரத்தை வைத்துக் கொள்வது நியாயமாக இருக்கும், நலமாக இருக்கும். இன்றைய தினம், கிராமங்களிலே, நீர்ப்பாசன விவகாரங்கள், குழப்பமும், சச்சரவுகளும் மிகுந்தவை. குளங்கள் தோறும், தண்ணீர் வினியோகம் செய்யும் பொறுப்பு P.W.D.-ஐ சேர்ந்தது. பாய்மான வாய்க்கால்கள் தோறும், தண்ணீர் விடும் பொருப்பு, ரெவின்யூ, இலாகாவினரைச் சேர்ந்ததாக இருக்கிறது. இவற்றைச் சரிவரச் செய்ய, ஆங்காங்கே விவசாயச் சங்கங்கள் இயங்கி வருகின்றன. சில சங்கங்களிலே ஒரு மடையினரை மோசம் செய்து மறு மடைக்கு தண்ணீர் விடுவதிலும், அதற்காக வசூலிக்கும் பணத்தைத் தவரான வழிகளில் செலவழிக்கும் நிலைமையும் இருக்கிறது. பல சங்கங்கள் நல்ல கருத்தோடு இருக்கின்றன. முழுப் பொறுப்பும் அரசாங்கமே எடுத்து, முழுச் செலவையும் ஏற்றுக்கொள்ள முடியாது என்று இம்மாதிரியான சங்கங்களை ஊக்குவித்து வருகிறோம். கிராம பஞ்சாயத்துக்கு பொருப்பைக் கொடுக்கும் நேரத்திலே, ஒரு பஞ்சாயத்தில் குடியிருப்பு இருக்கும், நில புலன்கள் மற்றொரு பஞ்சாயத்தில் இருக்கும். ஒன்றுக்கு ஒன்று உள்ள விவகாரங்கள், வில்லங்கங்கள் காரணமாக நீர்ப்பாசன வசதிகளில் அதிகாரம் தவரான வழிகளில் பிரயோகிக்கப் படலாம். ஆகவே, இந்த அதிகாரத்தை ஜாக்கிரதையாக அவர்களுக்குக் கொடுக்கவேண்டும். அதில் அரசாங்கம் தன் கையில் வைத்துக் கொண்டு ஜாக்கிரதையாகச் செய்வதே மிக்க நல்லது. இதைச் சொல்லும் போது, கிராமங்களிலே இயங்கும் விவசாய சங்கங்கள், ரெஜிஸ்டர் செய்து தான் இயங்கவேண்டும் என்றிருக்கவேண்டும். அப்பொழுதுதான் அவர்களை நன்றாக ஊக்குவிக்கவும், அவர்களின் சுய முயற்சியைத் தூண்டி விடவும் முடியும். இதையெல்லாம் கவனித்து, இந்த அதிகாரத்தை அவர்களுக்கு ஜாக்கிரதையாகக் கொடுக்க வேண்டும்.

THE HON. SRI C. SUBRAMANIAM : கனம் செல்வராஜன் அவர்கள் சொன்னவைகள் எல்லாம் கவனத்தில் எடுத்துக் கொள்ளப்படும்.

The Government amendment was put and carried.

Clause 85 as re-numbered and amended was put and carried.

*Clause* 86 *as re-numbered.*

DEPUTY SPEAKER : The motion is—

" That clause 86 do stand part of the Bill."

29th September 1958]

THE HON. C. SUBRAMANIAM : Mr. Deputy Speaker, Sir, I move—

'In clause 86 as re-numbered, *for* sub-clause (2), *substitute* the following sub-clause :—

"(2) The following porambokes, namely, grazing grounds, threshing floors, burning and burial-grounds, cattle-stands cart-stands and topes shall vest in the panchayat, and the panchayat shall have power, subject to such restrictions and control as may be prescribed, to regulate the use of such porambokes, provided the porambokes are at the disposal of the Government." '

DEPUTY SPEAKER : The clause and the amendment are before the House for discussion.

SRI V. K. KOTHANDARAMAN : ஸார், இதிலே பஞ்சாயத்துக்களுக்கு எந்த எந்த புறம்போக்கு நிலங்களை கொடுப்பது என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் கிராமத்திலே பலதரப் பட்ட தரிசுகள், சர்க்கார் புறம்போக்குகளாக இருக்கின்றன. எவையெல்லாம் சர்க்கார் புறம்போக்கோ அத்தனையும், பஞ்சாயத்து ஏரியாக்குள் இருக்கக்கூடிய அத்தனை புறம்போக்குகளையும், அந்த பஞ்சாயத்து அதிகாரத்துக்கு விட்டு விடவேண்டும் என்று சொல்ல விரும்புகிறேன். காரணம், இன்றைய தினம், பல கிராமங்களிலே இருக்கக் கூடியவர்கள் 20, 30, 40 வருஷங்களாக பல தரிசுகளில் வீடு கட்டிக் கொண்டும், விவசாயம் செய்து கொண்டும் இருந்து வந்திருக்கிறார்கள். ஆனாலும், அவர்களுக்கு அந்த நிலங்கள் பட்டா செய்து கொடுக்கப்படவில்லை. அதற்குப் பதிலாக, 5 அல்லது 6 வருஷங்கள் மட்டுமே வீடு கட்டியிருந்தபோதிலும், அவர்களுக்கு, மணியக்காரர்கள், கணக்குப் பிள்ளைகள் தங்கள் இஷ்டம்போல் பட்டா செய்து கொடுக்கும் நிலைமை இருக்கிறது. வசதி இல்லாத மக்கள் பெரிய அளவு 10–50 a.m.
பாதிக்கப்படக்கூடிய நிலைமையில் இருக்கக்கூடிய காரணத்தால் உடனுக்குடன் நாம் அவர்களுக்கு நன்மை செய்ய வேண்டுமானால் புரம்போக்கு என்ற பெயரால் இருக்கக்கூடிய பல நிலங்களை அந்தப் பெயரால் இருக்கக் கூடியவைகளை மாற்றிவிட்டு அதற்காக வேண்டி மணியக்காரர் அல்லது கணக்குப்பிள்ளை சிபாரிசு செய்து அதற்கு மேல் தாசில்தார் சிபாரிசு செய்து அதன் மேல் ரிவினியு போர்டுக்கு வந்த பிறகு குறிப்பிட்ட புறம்போக்கை விலக்கி விட்டு விட்டு, அப்படிப்பட்ட குறிப்பிட்ட புறம்போக்கு நிலங்கள் அதற்கு உபயோகம் இல்லை என்று அவர்களுடைய சிபாரிசின் அடிப்படையில் அதை மாற்றுவதற்கு பல வருஷங்களாகக்கூடிய நிலைமை இருக்கிறது. அதன் காரணத்தால், அந்த நிலம் எந்த நோக்கத்துடன் ஒதுக்கப்பட்டதோ எந்தக் காரணத்திற்கு வேண்டி அந்தப் புரம்போக்கு நிலம் இருந்ததோ அந்தக் காரியத்துக்கு அது உபயோகப்படவில்லை என்று சொன்னால் அதை எடுத்து விவசாயம் செய்வதற்கோ அல்லது வீடுகள் கட்டிக்கொள்வதற்கோ இன்றைக்கு விட்டு விடவேண்டும் என்ற அளவுக்கு அந்த பஞ்சாயத்துக்கு அதிகாரம் இருக்கவேண்டும். அந்த அடிப்படையில் பஞ்சாயத்து ஏரியாவில் இருக்கக்கூடிய எல்லா நிலங்களையும் பஞ்சாயத்து எடுத்து உபயோகப்படுத்தக்கூடிய அதிகாரம் அவர்களுக்கு இருக்க வேண்டும் என்ற அபிப்பிராயத்தை நான் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : Sir, I have nothing to say.

The amendment was put and carried.

Clause 86 as re-numbered and amended, was put and carried.

Clauses 87, 88 and 89 as re-numbered were put and carried.

*Clause* 90.

DEPUTY SPEAKER: The motion is—

"That clause 90 do stand part of the Bill."

* **Sri A. GOVINDASAMY** : கனம் அவைத் தலைவரவர்களே, உத்சவம் நடந்தால் அல்லது சந்தை நடக்கிற நேரத்தில் பொது ஜன பாதுகாப்புக்காக சுகாதார வசதி செய்துக் கொடுக்கக்கூடிய நிலைமை யை பஞ்சாயத்து பொறுப்பு ஏற்றுக் கொள்ள வேண்டும், என்று தாற் காலிகமாக அல்லது நிரந்தரமாக ஏற்றுக் கொள்ள வேண்டும் என்ற விதியில் இது குறிப்பிடப்பட்டிருக்கிறது. அதனுடைய செலவை சர்க்கார் விரும்பினால் ட்ரஸ்டிகளை கலந்து கொண்டு அவர்கள் அந்த செலவை ஏற்றுக்கொள்ள வசதிசெய்து கொள்ளக்கூடிய நிலைமையில், சர்க்கார் விரும்பினால் என்று இருக்கிறது. "**the Government may after consulting the trustee**" என்று இருக்கிறது. அவசியம் என்று சர்க்கார் விரும்பினால் ட்ரஸ்டிகளிடமிருந்து வசூலிக்கலாம் என்று இருக்கிறது. சாதாரணமாக இப் பொழுது பெரிய கோவில்களாக இருந்தால் நிறைய வருமானம் வருகிறது. அதையெல்லாம் இம்மாதிரி சுகாதார வசதி செய்து கொடுப்பதற்கு எடுத்து கொள்ளலாம். அது பஞ்சாயத்தில் பொறுப்பாக இருக்கக்கூடாது. பெரிய கோவில்களாக இருந்தால் அதற்கு நல்ல வருமானம் வரக்கூடியதாக இருந்தால் அந்த வருமானத்தைக் கொண்டு இப்படிப்பட்ட வசதிகளைச் செய்து கொள்ளக்கூடியதாக இருக்க வேண்டும். "**The Government may after consulting**" என்று இருப்பதால் சர்க்கார் விரும்பினால் செய்து கொள்ளலாம், விரும்பா விட்டால் செய்து கொள்ளாமல் இருக்கலாம் என்று இருக்கிறது. அதனால் பஞ்சாயத்துக்கு அந்தச் செலவு வருமே என்ற அச்சத்தின் காரணமாக இப்படிப்பட்ட செலவுகளைப் பெரிய வருமானம் வரக்கூடிய கோவில்கள் ஏற்றுக்கொள்ளவேண்டும் என்று இருக்க வேண்டும். ஆயிரக்கணக்கான மக்கள் வருவதாலும், அதன் மூலமாக நிறைய வருமானம் வரக்கூடியதாக இருப்பதாலும் அப்படிச் செலவு செய் யக்கூடிய பொறுப்பை கோவில் நிர்வாகம் எடுத்துக் கொள்ளக்கூடிய நிலைமையை உண்டாக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

**Sri J. MATHA GOWDER** : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, பெரிய கோவில்களில் உற்சவங்கள் நடக்கும்போது நாம் அவர்களுக்கு வரிகளைப் போட்டுக்கொண்டு அதன் மூலம் பணம் வசூலித்துக் கொண்டு வருகிறோம். அவர்களிடமிருந்து நியாயமான வரிகளையும் நாம் வசூலித்துக் கொண்டுவருகிறோம். அந்த நிலைமையில் அவர்களிட மிருந்து உத்சவ காலங்களிலும் மற்ற காலங்களிலும் அவர்களிடமிருந்து சட்டத்தைப் போட்டு வசூலிப்பது என்பது அவ்வளவு உசிதமானது அல்ல என்பது என்னுடைய அபிப்பிராயம். நாம் எவ்வளவோ காரியங்களைச் செய்கிறோம். அந்த நிலைமையில் அவர்களே வேண்டுமானால் செய்ய லாமேதவிர நாம் அவர்களை நிர்ப்பந்தம் செய்யக்கூடாது. அப்படிச் செய் தால் அது அவ்வளவு நியாயமாக இருக்காது. "**may consult**" என்று இருப்பதால் அவர்கள் கலந்து ஆலோசனை செய்து ஏதாவது அவர்கள் கொடுப்பதாக இருந்தால் கொடுக்கலாம். அவர்கள் கொடுக்கவில்லை என் றால் அவர்களை நாம் நிர்ப்பந்திக்கக்கூடாது. நாம் அவர்களுக்கு இப்பொ ழுது வரி போடுவதால் அவர்களை நிர்ப்பந்தப் படுத்தி வாங்கக்கூடாது. அப் படி வாங்குவது நியாயம் இல்லை என்று என்னுடைய அபிப்பிராயத்தை தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

**The Hon. Sri C. SUBRAMANIAM** : கனம் சபாநாயகர் அவர்களே, இப்பொழுதுள்ள கொள்கையின்படி கோவில்களுடைய பணம் மக்களுக்கு பயன்பட வேண்டும் என்பதுதான். அந்த முறையில் தான் இதைப் போடப்பட்டிருக்கிறது. எந்த எந்த சமயத்தில், ஆலயங் களுக்குச் சௌகர்யங்கள் இருக்கிறதோ, அந்த அந்த சமயங்களில் எடுத்துக் கொண்டு மக்களுக்கு வசதி செய்து கொடுப்பதற்குத்தான், செலவுகளைச் செய்வதற்குத்தான் இந்த முறையில் எடுத்துக் கொள்ளப்படும் என்று இந்த அதிகாரத்தை எடுத்துக் கொள்ளப்பட்டிருக்கிறது. எப்பொழுது

29th September 1958] [Sri C. Subramaniam]

அவசியம் என்று தோன்றுகிறதோ அப்பொழுது எடுத்துக் கொள்வதற்கும், எவ்வளவு தூரம் எடுத்துக்கொள்ள முடியுமோ அவ்வளவு தூரம் எடுத்துக் கொள்வதற்கும் தான் இப்படி போடப்பட்டிருக்கிறது.

Clause 90 was put and carried.

Clauses 91, 92 and 93 were put and carried.

*Clause* 94.

DEPUTY SPEAKER : The motion is—

'That clause 94 do stand part of the Bill.'

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I move—

'In clause 94—

(i) in the heading, *after* the word "small-pox", *insert* "or cholera";

(ii) *after* the words "from small-pox", *insert* "or cholera".'

DEPUTY SPEAKER : Now the clause and the amendment are before the House for discussion.

SRI M. S. SELVARAJAN : கனம் சபாநாயகர் அவர்களே, காலரா, அம்மை போன்ற பெரிய பயங்கரமான வியாதிகள் வரும்போது எங்கே கிராம அதிகாரி, கிராமத் தலைவர் இருக்கிறார் என்று பார்த்து அல்லது கமிஷனருக்குத் தெரிவிக்கவேண்டும் என்று இருப்பதை பஞ்சாயத்து எக்சிக்யூடிவ் அதாரிட்டி அல்லது தலைவர் என்று போட்டால் தவறு இல்லை. அவர்களிடத்திலும் தெரிவிக்கவேண்டும் என்று அவரையும் சேர்த்து விடுவதில் என்ன தவறு என்பதை அரசாங்கம் யோசிக்க வேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

The amendment was put and carried.

Clause 94, as amended, was put and carried.

Clauses 95 to 99 were put and carried.



*Clause* 100.

DEPUTY SPEAKER : The motion is—

"That clause 100 do stand part of the Bill."

SRI N. K. PALANISAMI : Sir, I move—

"In sub-clause (2), in item (*d*), for the word 'Inspector' in line 9, *substitute* the word 'Collector'."

The amendment was duly seconded.

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I move—

"In the heading to clause 100, *omit* 'excepted'."

DEPUTY SPEAKER : Now the clause and the amendments are before the House for discussion.

[29th September 1958

SRI N. K. PALANISAMI : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்தத் திருத்தத்தின்படி, ஏற்கெனவே தனி நபருடைய லேசென்சை பஞ்சாயத்து யூனியனோ அல்லது பஞ்சாயத்தோ ஒத்துக்கொள்ளாவிட்டால் அதை இன்ஸ்பெக்டரிடம் அப்பீல் செய்யவேண்டும் என்று இருக்கிறது. ஏற்கனவே கலெக்டர்தான் ஜில்லா டெவலப்மெண்டுக்கு தலைவராக இருப்பதாக சொல்லப்பட்டிருக்கிறது. அதனால் அவரிடம் இன்ஸ்பெக்டருடைய சிபாரிசின் மூலமாக சஸ்பெண்ட் செய்வதற்கோ அல்லது சஸ்பெண்ட் செய்யாமல் இருப்பதற்கோ சிபாரிசு செய்யலாம். அந்த அடிப்படையில் இன்ஸ்பெக்டர் என்று இருப்பதற்கு பதிலாக கலெக்டர் என்று போட்டுக் கொண்டால் சரியாக இருக்கும். இன்ஸ்பெக்டருக்கு மேல் கலெக்டர் மேலதிகாரியாக இருப்பதால் அதன்படி இருக்கவேண்டும். அதன்படி ஏற்பாடு செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

11 a.m. SRI M. S. SELVARAJAN : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, இந்த மசோதாவின் 100-வது ஷரத்துப்படி, சந்தையினுடைய வருமானத்தைக் கணக்கிடும்போது, "க்ராஸ் இன்கம்," அதாவது மொத்த வருமானம் என்பது, சந்தையை ஏலத்தில் விடும்போது, ஏலத்தில் எவ்வளவு தொகை கிடைக்கிறதோ அந்தத் தொகையா ? அல்லது வசூலிக்கப்படும் மொத்தத் தொகையா ? என்ற சந்தேகங்கள் சில வருஷங்களுக்கு முன் எழுந்தன. "க்ராஸ் இன்கம்" இல் 15 சத விகிதம் பஞ்சாயத்துக்கு லைசென்ஸ் கட்டணமாகக் கிடைப்பதென்றால், அது எந்த க்ராஸ் இனகத்தில் என்று தெரியவில்லை. ஆகவே, க்ராஸ் இனகம், என்பது எது என்று வரையறை செய்யப்படவேண்டும். அதற்குரிய விதி செய்யப்படவேண்டும் என்று நான் கேட்டுக்கொள்ளுகின்றேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, 'க்ராஸ் இன்கம்' என்று கனம் அங்கத்தினர் குறிப்பிடுவது இந்த ஷரத்தில் வருவது இல்லேயே. எங்கே 'க்ராஸ் இன்கம்' என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது என்று கனம் அங்கத்தினர் தெரிவிக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

SRI M. S. SELVARAJAN : இந்த ஷரத்தில் நான்காவது பிரிவில் கண்டுள்ளதாவது :

"(4) When a licence granted under sub-section (2) does not permit the levy of any fee, it shall be granted free of charged ; but when such permission is given, a fee not exceeding 15 per cent of the gross income of the owner from the market in the preceding year shall be charged by the panchayat or panchayat union council as the case may be for such licence."

ஜில்லா போர்டு மார்க்கெட்டைப் பொறுத்தவரையில் எப்படி "க்ராஸ் இன்கம்" கணக்கிடப்படுகிறது ? ஏலம் விடும் தொகையிலே கணக்கிடப்படுகிறதா ? மொத்தமாகக் கிடைக்கும் வருமானத்திலிருந்து கணக்கிடப்படுகிறதா ? இதைத் தெளிவுபடுத்த வேண்டிய அவசியம் இருக்கிறது.

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, we will provide for it in the rules.

The amendment of Sri N. K. Palanisami was put and lost.

The Government amendment was put and carried.

Clause 100, as amended, was put and carried.

Clauses 101 to 110 were put and carried.

29th September 1958]

*Clause* 111.

DEPUTY SPEAKER : The motion is—

" That clause 111 do stand part of the Bill."

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I move—

" *For* clause 111, *substitute* the following :—

' 111. *Purposes for which pplaces may not be used without licence.*—(1) The Government may, by notification specify the purposes which, in their opinion, are likely to be offensive or dangerous to human life or health or property.

(2) (i) The panchayat union council in the case of panchayat villages may, with the previous approval of the prescribed authority, notify that no place within the limits of any panchayat village in the panchayat development block or within the limits of such panchayat village or villages as may be specified in the notification shall be used for any of the purposes referred to in sub-section (1) without a licence and except in accordance with the conditions specified in such licence.

(ii) The town panchayat may, with the previous approval of the prescribed authority, notify that no place within the limits of the panchayat town shall be used for any of the purposes referred to in sub-section (1) without a licence and except in accordance with the conditions specified in such licence.

(3) No notification issued under sub-section (1) or sub-section (2) shall take effect until sixty days from the date of its publication.

(4) The executive officer in the case of panchayat towns and the Commissioner in the case of panchayat villages shall be the authority competent to grant the licence or to refuse to grant it.' "

In view of the modified clause, I do not think that any amendment will arise.

The amendment was put and carried.

*Clause* 112.

DEPUTY SPEAKER : The motion is—

" That clause 112 do stand part of the Bill."

SRI S. M. ANNAMALAI : Sir, I move—

" *Omit* the words ' union council ' *and* ' union ' wherever they occur."

The amendment was duly seconded.

SRI N. K. PALANISAMI : Sir, I move—

" In the clause, in line 17, *after* the words ' permission of the ' *add* the words ' panchayat board '."

The amendment was duly seconded.

**Sri N. K. PALANISAMI**: Sir, I move—

"*After* the word 'council' in line 18, *insert* the words 'granted on the recommendation of the panchayat concerned'."

The amendment was duly seconded.

**Sri A. GOVINDASAMY**: Sir, I move—

"*After* the words 'panchayat union council' occurring in line 18, *add* the words 'for areas lying within the village panchayats and the town panchayats lying within them'."

The amendment was duly seconded.

**The Hon. Sri C. SUBRAMANIAM**: Sir, I move—

"In clause 112, *after* the words 'panchayat union council' *insert* 'in panchayat villages and the town panchayat in a panchayat town'."

DEPUTY SPEAKER: The clause and the amendments are before the House for discussion.

**Sri N. K. PALANISAMI**: கனம் உதவி சபாநாயகர் அவர்களே, ஒரு பாக்டரி கட்ட வேண்டியதற்கோ அல்லது பாக்கியிருக்கும் மெஷினரிகளை வைக்கவேண்டியதற்கோ அனுமதி கொடுக்கக்கூடிய அதிகாரம் பஞ்சாயத்துக் கவுன்சிலுக்குத்தான் இருக்கவேண்டும். ஏற்கெனவே இருக்கும் வழக்கப் பிரகாரம் ஒவ்வொரு பஞ்சாயத்து போர்டும் லைசென்ஸ் கொடுக்க சிபார்சு செய்யவேண்டிய அதிகாரம் இருந்தது. ஆனால், அந்த அதிகாரம் இதன்மூலம் எடுக்கப்பட்டுவிட்டது என்று நினைக்கிறேன். ஆகையால், பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலிடம் அனுமதியைப் பெறுவதற்குமுன், பஞ்சாயத்தினுடைய சம்மதத்தையும் பெற்றிருக்கவேண்டும் என்பது என்னுடைய திருத்தமாகும்.

**Sri S. M. ANNAMALAI**: கனம் உதவி சபாநாயகர் அவர்களே, ரைஸ் மில் வைப்பது போன்றவைகளில் லைசென்ஸ் வழங்குவதற்கு, இப்பொழுது சர்க்கார் கொடுத்திருக்கும் திருத்தத்தின்படி, பெரிய பஞ்சாயத்துக்களுக்கு மட்டும்தான் அதிகாரம் இருக்கிறது. அத்தகைய அதிகாரம் சிறிய பஞ்சாயத்துக்களுக்கும் இருக்கவேண்டுமென்று நான் கருதுகிறேன். சதாரணமாக சிறிய பஞ்சாயத்துக்கள்தான் அவரவர்கள் பகுதியிலே ரைஸ் மில் வைக்கலாமா, வைக்கக்கூடாதா என்பதை நிர்ணயிக்க வேண்டும். பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலுக்கு அந்த உரிமையைத் தருவது உசிதமல்ல, சிறிய பஞ்சாயத்துக்களுக்கும் அந்த உரிமையைத் தருவது நல்லது என நான் நினைக்கிறேன். என்னுடைய திருத்தத்தை சர்க்கார் ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கிறேன்.

**Sri M. S. SELVARAJAN**: கனம் உதவி சபாநாயகர் அவர்களே, ரைஸ் மில் அமைப்பது காரணமாகவே பல்வேறு பஞ்சாயத்துக்கள் கலைக்கப்படவேண்டி ஏற்பட்டது என்று சரித்திரம் இருக்கிறது. பெரிய தொழிற் சாலைகள் நிறுவுகிறபோது, அதற்குவேண்டிய இயந்திரகளையெல்லாம் வைக்க அனுமதி தரவேண்டிய பொறுப்பு ஒரு தனிப்பட்ட பஞ்சாயத்தை மட்டும் சேர்ந்தது அல்ல. அது, அந்தப் பஞ்சாயத்தைச் சுற்றியுள்ள பல்வேறு கிராமங்களினுடைய சாதக பாதங்களைப் பொறுத்ததாகையால், இதுபோன்ற விஷயங்களில் ஒரு தனிப்பட்ட பஞ்சாயத்தே முடிவு செய்வதைவிட, அதற்கு மேற்பட்டு பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் பரிசீலனை செய்வது நல்லது. ஒரு இடத்தில் ஒரு மெஷனரியை வைப்பதினால் ஏற்படும் சாதக பாதகங்களைப் பரிசீலனை செய்து அனுமதி வழங்க வேண்டிய பொறுப்பு இந்த மசோதாவில் பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலுக்கு கொடுத்திருப்பது சரி என்று நான் நினைக்கிறேன்.

29th September 1958]

THE HON. SRI C. SUBRAMANIAM: Sir, no reply is necessary.

The amendment of Sri S. M. Annamalai was put and lost.

The amendments of Sri N. K. Palanisami were put and lost.

The amendment of Sri Govindasamy was, by leave, withdrawn.

The Government amendment was put and carried.

Clause 112, as amended, was put and carried.

*Clause* 113. 11-10 a.m.

DEPUTY SPEAKER: The motion is—

"That clause 113 do stand part of the Bill."

THE HON. SRI C. SUBRAMANIAM: Sir, I move—

"In clause 113—

(i) In sub-clause (2) *for* the words 'to set apart specified areas in the panchayat union' *substitute* 'in panchayat villages and the town panchayat in a panchayat town to set apart specified areas';

(ii) *After* sub-clause (3) *add* the following:—

'(4) The income derived from fees on licences under section 111 and on permissions under section 112 shall, if received by the panchayat union council, be credited to the funds of the village panchayat concerned and if received by the town panchayat be credited to the funds of that town panchayat.'"

DEPUTY SPEAKER: The clause and the amendment are before the House for discussion.

SRI M. S. SELVARAJAN: பஞ்சாயத்து பகுதிகளில்—குடியிருப்புப் பகுதி, குடியிருப்புக்கு லாயக்கற்ற பகுதி, தொழில் ஏற்படுத்துவதற்கு லாயக்கான இண்டஸ்டிரியல் ஏரியா—என்பதாக மூன்று விதமாகப் பிரிக்கப்படுகின்றன. பல்வேறு பகுதிகளில் பல வருஷங்களுக்கு முன்பே இதுபோன்ற பிரிவினை செய்யப்பட்டு அதன் காரணமாக அந்தப் பகுதிகளில் இன்றையதினம் சிறு சிறு தொழில்கள் கூட வளர இயலாத கஷ்டம் இருக்கிறது. குறிப்பாக இரண்டு கஷ்டங்கள் இருக்கின்றன. முதலில் ஒரு பஞ்சாயத்தினால்—இந்தப் பகுதி குடியிருப்புக்கு லாயக்கானது, தொழில் வைப்பதற்கு லாயக்கானது—லாயக்கற்றது—என்பதாக பிரித்து வைத்துவிடுகிறார்கள் என்றால் பின்னால் வருகிற பஞ்சாயத்துகளினால் அதில் அபிப்பிராயம் சொல்வதற்கோ—அல்லது அதைத் திருத்துவதற்கோ அதிகாரம் வழங்கப்படவில்லை. ஒருதரம் விருப்பு வெறுப்புக்குத் தக்க வகையில் பிரிக்கப்பட்டுவிட்டது என்றாலும்—குடியிருப்பு லாயக்கான இடம்—குடியிருப்புக்கு லாயக்கற்ற இடம்—தொழில் நடத்துவதற்கு ஏற்ற இடம்—என்று பிரிக்கப்பட்டுவிட்டால் அதை மாற்ற முடியாது. தலைமுறை தலைமுறையாக வந்துகொண்டிருக்கும் இந்த வழக்கத்தில் ஏதாவது மாறுதல் செய்யவேண்டுமென்று சர்க்காருக்கு எழுதினாலும்—மாற்றலாம் அல்லது மாற்றக்கூடாது என்று இரண்டு பதிலில் ஏதாவது ஒன்றை உடனடியாக சர்க்கார் அனுப்பிவைப்பது கிடையாது. காலதாமதம் மிகவும் செய்வதால் ஒரு மாட்ச் பாக்டரியோ அல்லது வேறு ஏதாவது சிறு தொழிலை ஆரம்பிக்கவேண்டுமென்றாலோ முடியவில்லை. அப்போது இந்தக் கஷ்டம் வெகு

வாக உணரப்படுகிறது. ஆகவே இன்றையதினம் எப்படி பிரிக்கப்படுகிறதோ அதுவே நிரந்தரமாக இருக்கவேண்டும். அடிக்கடி இதைப் பரிசீலனை செய்து மாற்றாமல் இருப்பது நல்லதுதான். ஆனால் ஏதாவது மாற்ற வேண்டுமென்ற கோரிக்கை வந்தால் மூன்று நான்கு மாதத்திற்குள் உண்டு இல்லை என்ற முடிவு சர்க்கார் அனுப்பிடவேண்டும். அது நல்ல சூழ்நிலையை உண்டாக்கும். தொழில்துறையை விருத்தி செய்வதற்கு வழி ஏற்படும் என்று சொல்ல விரும்புகிறேன்.

* SRI A. GOVINDASAMY : உப தலைவர் அவர்களே, ஒருதரம் ஒரு பகுதி தொழில் பிரதேசத்திற்கு லாயக்கற்றது என்று நிர்ணயிக்கப் பட்டுவிட்டால் அதை மீண்டும் புனராலோசனை செய்யக் கூடாதென்ற நிலைமை இருக்கக்கூடாது. விருப்பு வெறுப்பினால் செய்துவிட்டிருக்கலாம். தவறாக நிர்ணயிக்கப்பட்டிருந்தால் அதைத் திருத்துவதற்கு வழி இருக்க வேண்டும் என்கிற கருத்தை வலியுறுத்த விரும்புகிறேன். ஒரு வீட்டி லுள்ள ஒரு பகுதியை தொழில் நடத்துவதற்கு லாயக்கான பகுதி என்றும், இன்னொரு பகுதியை குடியிருப்புக்குத்தான் லாயக்குள்ளது என்றும் பிரிக் கக்கூடிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது. முன்பு அமைச்சராக இருந்த ஸ்ரீ ஏ. பி. ஷெட்டி அவர்களை அழைத்துக் கொண்டுபோய் அதைக் காட்டி யிருக்கிறேன். அப்போது நாங்கள் சொன்ன கோரிக்கையை ஏற்றுக்கொண் டார்கள். ஒருதரம் முடிவு செய்துவிட்டால்—தவறாக இருந்தாலும்— அதற்குப் பரிகாரமே இருக்கக்கூடாது என்பது சரியல்ல. பிற்பாடு சங்கடம் எழக்கூடிய சமயத்தில் அதைப்பற்றிப் பரிசீலனை செய்ய அதிகாரம் இருக்க வேண்டும். அதற்குத் தகுந்த விதி இருக்கவேண்டுமென்று கருதுகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : இப்போது அந்தமாதிரி புன ராலோசனை செய்வதற்கு அதிகாரம் இருக்கிறது. அந்த அதிகாரத்தை துரிதமாக—சாதகமாகவோ பாதகமாகவோ முடிவு கொடுத்துவிடவேண்டு மென்பதைப்பற்றித்தான் ஸ்ரீ செல்வராஜ் பேசினார்கள். அப்படிப்பட்ட புகார் ஏற்படாது இருக்க தக்கநடவடிக்கை எடுத்துக்கொள்ளப்படும் என்று சொல்லிக்கொண்டு இந்தத் திருத்தத்தை ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

The Government amendment was put and carried.

Clause 113, as amended, was put and carried.

*Clause* 114.

DEPUTY SPEAKER : The motion is—

" That clause 114 do stand part of the Bill."

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I move—

" (i) In sub-clause (*a*) for the words ' the executive authority ' *substitute* ' the executive officer in the case of panchayat town and the commissioner in the case of panchayat villages ' and *omit* the word ' and ' occurring at the end;

(ii) *For* sub-clause (*b*) *substitute* the following :—

' (*b*) the appeal from the order of the executive officer or the commissioner granting, refusing, revoking or suspending a licence, shall lie to the town panchayat or the panchayat union council as the case may be; and

(*c*) the income derived from fees on licences under this section shall, if received by the panchayat union council, be credited

29th September 1958] [Sri C. Subramaniam]

to the funds of the village panchayats concerned and if received by the town panchayat, be credited to the funds of that town panchayat '."

The amendment was put and carried.

Clause 114, as amended, was put and carried.

*Clause* 115.

DEPUTY SPEAKER: The motion is—

" That clause 115 do stand part of the Bill."

SRI S. M. ANNAMALAI: Sir, I move—

" (i) To sub-clause (1), *add* the following proviso, namely :—

' Provided the local cess shall be levied only on land revenue paid Rs. 5 and above '.

(ii) In sub-clause (4), in item (*b*) for the words ' two-ninths ' *substitute* the words ' three-ninths '."

The amendment was duly seconded.

SRI V. K. KOTHANDARAMAN: Sir, I move—

" In item (*c*) of sub-clause (4) *insert* the following, namely :—

' Out of the balance of the proceeds of the local cess so collected from every panchayat village in the panchayat union, 25 per cent of the collection from each village shall be credited to the respective village panchayat funds '."

The amendment was duly seconded.

THE HON. SRI C. SUBRAMANIAM: Sir, I move—

" In the Explanation to clause 115 (1), *omit* ' or the surcharge payable under the Madras Land Revenue (Surcharge) Act, 1954 (Madras Act XIX of 1954) '."

DEPUTY SPEAKER: The clause and the amendments are before the House for discussion.

SRI S. M. ANNAMALAI: சட்டமன்றத் தலைவர் அவர்களே, நான் கொடுத்திருக்கக்கூடிய திருத்தம் லாண்டு ரெவின்யூவாக ஐந்து ரூபாய்க்குக் குறைவாகக்கொடுக்கக் கூடியவர்களுக்கு லோகல் செஸ் விதிக்கக் கூடாதென்ற நோக்கத்துடன் கொடுத்திருக்கிறேன். ஒரு ஏக்கர் இரண்டு ஏக்கர் வைத்திருக்கக் கூடிய ஏழைகள் கூட ஐந்து ரூபாய் வரி கட்டவேண்டியிருக்கிறது. அப்படிப்பட்டவர்களுக்கு மேலும் இந்த லோகல் செஸ் போட்டு பாமர மக்களைக் கஷ்டப்படுத்தவேண்டாம் என்ற நோக்கத்துடன் இந்தத் திருத்தத்தைக் கொடுத்திருக்கிறேன். இதை ஏற்றுக்கொள்ளவேண்டும்.

அடுத்தபடியாக சிறிய பஞ்சாயத்துகளுக்கு மூன்றில் ஒரு பாகமும் கட்டணம், 45 நயா பைசா, ஒன்பதில் 3 பாகம் 15 நயா பைசா கொடுக்கலாம் என்று இருக்கிறது. குறிப்பாக சிறிய பஞ்சாயத்து 20 நயா பைசா என்றும், பெரிய பஞ்சாயத்துக்கு 10 நயா பைசா என்றும் இருக்கிறது. பெரிய பஞ்சாயத்துகள் பத்து ஆண்டுகளுக்குப் பின்னும் இன்னும் நல்ல வகையில் ரோடு முதலியவற்றில் முன்னேறாமல் இருக்கின்றன.

(Mr. Speaker in the Chair.)

11-30 a.m. அப்படிப்பட்ட பெரிய பஞ்சாயத்துக்களுக்கும், சிறிய பஞ்சாயத்துக்களுக்கும் கொடுக்கப்படும் அளவில்—நபருக்கு 20 நயா பைசா வீதம்—நிதி கொடுக்கப்பட வேண்டும் என்று கூறும் திருத்தத்தை நான் கொடுத்திருக்கிறேன். அந்தத் திருத்தத்தை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று கனம் அமைச்சரைக் கேட்டுக்கொள்கிறேன்.

SRI V. K. KOTHANDARAMAN : கனம் சபாநாயகர் அவர்களே, பஞ்சாயத்து அபிவிருத்தி தொகுதியில் வசூலிக்கப்பட்ட பிரதேச வரியில் எஞ்சியிருக்கும் தொகையில், கிராம மக்களில் ஒவ்வொருவருக்கும் 20 நயா பைசாவிற்குக் குறையாத விகிதப்படி பஞ்சாயத்துக்களுக்கு நிதி அளிக்க வேண்டும் என்று இந்தப் பிரிவில் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த விகிதத்தை 25 சதவிகிதமாக ஆக்கவேண்டும் என்று நான் கோறுகிறேன். "25 சதவிகிதம் என்றால், அது 12 நயா பைசாவாகத்தான் போகும்" என்று கனம் அமைச்சர் பதில் சொல்லக்கூடும். எனக்குத் தெரிந்த
11-20 a.m. வரையில், நான் கணக்குப்போட்டுத் தீர்மானத்தைச் சொல்கிறேன். பஞ்சாயத்து அபிவிருத்தித் தொகுதியில் வசூலிக்கப்பட்ட பிரசேத வரி மொத்தத்தில், ஒவ்வொரு நபரிடமிருந்தும் ஒரு ரூபாய் வசூலிக்கப்பட்டால் எவ்வளவு தொகை கிடைக்குமோ அவ்வளவு தொகை என்று வைத்துக் கொண்டாலும் ஒவ்வொருவருக்கும் 34 நயா பைசாவிற்குக் குறையாதபடி பஞ்சாயத்துகளுக்கு நிதி அளிக்க முடியும். அதாவது மொத்த வரிப் பணத்தில் 4/9 பங்கு கல்விக்காகச் செலவழிக்கப்படவேண்டும்; 2/9 பங்கு பஞ்சாயத்து அபிவிருத்திக்காகச் செலவழிக்கப்படவேண்டும். இவை போக பாக்கியிருப்பது 3/9 பங்கு அதாவது சுமார் 34 சதவிகிதம். 34 சதவிகிதம் என்றால் 34 நயா பைசா. ஆனால், பஞ்சாயத்துகளுக்கு 25 சதவிகிதம் நிதி கொடுக்கவேண்டும் என்று தான் நான் சொல்கிறேன். பஞ்சாயத்து அபிவிருத்தி ப்ளாக்கில் வசூலிக்கப்படும் பிரதேச வரியின் மொத்தத்தில் 25 சதவிகிதத்தை பஞ்சாயத்துக்களுக்கு ஒதுக்கிவிட்டு பாக்கியுள்ள தொகையை கல்வி போன்ற காரியங்களுக்காக ஒதுக்கவேண்டும் என்று சொல்கிறேன். மேலும், பஞ்சாயத்தில் வசூலிக்கப்படும் நில வரி, தண்ணீர் வரி போன்ற எல்லா வரிகளின் மூலமும் கிடைக்கும் பணத் தொகைகளை ஒட்டுமொத்தமாக சேர்த்து அந்தத் தொகையில் ரூபாய்க்கு 45 நயா பைசா வீதம் கணக்கிடப்பட்ட தொகையை வருவாயாகத்தரக்கூடிய ஒரு வரியை போடவேண்டும் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. ஏற்கெனவே இருக்கும் வரிகளே மிக மிக அதிகமானவை என்று கிராமங்களிலுள்ள விவசாயிகள் சொல்லிகொண்டிருக்கும்போது, மேலும் மேலும் வரிகள் விதிக்கக்கூடாது. மசோதாவில் அதிகமான வரிகள் குறிப்பிடப்பட்டுள்ளன. வரி போடாமல் எவ்வாறு அபிவிருத்திக் காரியங்களைச் செய்யமுடியும் என்று கனம் அமைச்சர் கேட்கலாம். கண்டிப்பாக அபிவிருத்தி வேலைகளைச் செய்யவேண்டும். அவைகளைச் செய்வதற்கு சர்க்காருக்கு வருமானம் இருக்கவேண்டும். அதற்காக ஏழை விவசாயிகள் பேரில் வரிகளைச் சுமத்த வேண்டியதில்லை. வருவாய் பெறுவதற்கு வேறு வழிகள் இருக்கின்றன. பஸ் போக்குவரத்துத் தொழிலை பஞ்சாயத்து யூனியன் நடத்தலாம். சினிமாத் தியேட்டர்களை பஞ்சாயத்து யூனியன்கள் நடத்தலாம். பாலங்களை கட்டும் வேலைகளும் இதர பல வேலைகளும் பஞ்சாயத்துக் யூனியன்களால் செய்யப்படலாம். அவைகள் இப்போது கண்டிராக்டர்களிடம் ஒப்படைக்கபடுகின்றன. கண்ட்ராக்டர்கள் கொள்ளை லாபம் அடிக்கிறார்கள். மேலும் கண்ட்ராக்டர்களால் கட்டப்படும் பாலங்கள் பல குறுகிய காலத்தில் விழுவதையும் பார்க்கிறோம். அவர்கள் சிமெண்டையும் மணலையும் தகுந்த அளவில் கலக்காததால், அவர்களால் கட்டப்படும் பாலங்களும் கட்டிடங்களும் குறுகிய காலத்தில் விழுகின்றன.

MR. SPEAKER : தாங்கள் கூறும் விஷயங்கள் இப்போது நடக்கும் விவாதத்திற்குப் பொருத்தமானவையாக இல்லை என்று நினைக்கிறேன். விவசாயிகளுக்கு வரி போடக்கூடாது என்று நீங்கள் சொல்லலாம். ஆனால் நீங்கள் இப்போது குறிப்பிட்ட மற்ற விஷயங்கள் இந்த விவாதத்திற்குப் பொருத்தமானவை அல்ல.

29th September 1958]

**Sri V. K. KOTHANDARAMAN:** பஞ்சாயத்து யூனியன்கள் நான் இப்போது குறிப்பிட்ட தொழில்களை நடத்துவதுடன், இப்போது குறிப்பிட்ட வேலைகளையும் செய்தால் அவைகளுக்கு அதிக வருமானம் வரும். அந்த வருமானத்தைக் கொண்டு அபிவிருத்திக் காரியங்களைச் செய்யமுடியும். எனவே, ரூபாய்க்கு 45 நயா பைசா என்ற விகிதத்தை ரூபாய்க்கு 20 நயா பைசாவாக மாற்ற வேண்டுமென்று கனம் அமைச்சரைக் கேட்டுக் கொள்கிறேன்.

***Sri A. GOVINDASAMY:** கனம் சபாநாயகர் அவர்களே, கிராமப் பஞ்சாயத்துகளுக்கும் நகரப் பஞ்சாயத்துகளுக்கும் அதிக வருமானம் கிடைக்கச் செய்யும் முறையில் மசோதாவை அமைக்கவேண்டுமென்று நான் கருதுகிறேன். அதற்கான திருத்தங்களை நான் கொடுக்கவில்லை. இருந்தாலும், அதற்கான திருத்தங்களை மசோதாவில் புகுத்த அரசாங்கம் விரும்பினால் இப்போதுகூட அதைச் செய்யலாம் என்பதால் இக்கருத்தை நான் தெரிவிக்கிறேன். அந்த அந்தப் பஞ்சாயத்தில் வசூலிக்கப்படும் மொத்த வரித் தொகையில் ஒரு பகுதி—5 சத விகிதமாவது—அந்த அந்தப் பஞ்சாயத்திற்கு ஒதுக்கப்படவேண்டும். இதை கவனிக்கவேண்டு மென்று கனம் அமைச்சரைக் கேட்டுக்கொள்கிறேன்.

**The Hon. Sri C. SUBRAMANIAM:** கனம் சபாநாயகர் அவர்களே, பஞ்சாயத்துக்களுக்கும், பஞ்சாயத்து யூனியன் கவுன்சில்களுக்கும் நிதி ஒதுக்குவதற்கும் அவைகள் தாங்களே நிதிவசதி செய்துகொள்வதற்கும் வகைசெய்வதற்காகவும் ஒரு தனிக் கமிட்டி நியமிக்கப்பட்டது; அந்தக் கமிட்டி எல்லாவற்றையும் பரிசீலித்து யோசனைகள் கூறியது. அந்த யோசனைகளின் அடிப்படையில்தான் இந்த மசோதா தயாரிக்கப்பட்டிருக்கிறது. அவ்வாறு தயாரிக்கப்பட்டிருக்கும் மசோதாவில் ஏதாவது ஒரு நிதி இனத்தை மாத்திரம் எடுத்துக்கொண்டு அந்த இனத்திற்கான தொகையை குறைக்கவேண்டுமென்றோ அந்த இனம் சம்பந்தப்பட்ட பிரிவை மாற்ற வேண்டுமென்றோ கூறுவது சரியல்ல. ஏனென்றால், ஏதாவது ஒரு பிரிவில் மாறுதல் செய்தாலும் எல்லாப் பிரிவுகளும் பாதிக்கப்படும். நிதி ஒதுக்கல் முறையை முழுவதும் பரிசீலித்து எவ்வாறு மாறுதல் செய்யவேண்டுமென்று சொன்னால், அதை கவனித்து அவசியமான மாறுதல்களைச் செய்யலாமே தவிர ஒரு பகுதியில் மாத்திரம் மாறுதல் செய்வது உசிதமல்ல. ஆகவே கனம் அங்கத்தினர்களின் யோசனைகள் பல நல்லவையாக இருந்தாலும், அவைகளை தனியே பரிசீலித்து முடிவுசெய்வதற்கில்லை.

ஐந்து ரூபாய்க்கு மேல் வரி செலுத்துபவர்களிடமிருந்து ஸர்சார்ஜ் வசூலிக்கக்கூடாதென்று ஸ்ரீ எஸ். எம். அண்ணாமலை கூறினார். இந்தப் பிரச்சனையில் நாம் முக்கியமாக ஒரு விஷயத்தை கவனிக்க வேண்டும். இப்போது கிராமங்களில் எத்தனை பேர் நிலம் படைத்தவர்களாக இருக்கிறார்கள் என்று பார்க்கவேண்டும். ஒரு கிராமத்தில் ஒரு ரூபாய் கிஸ்தி செலுத்துபவர்களை எடுத்துக்கொண்டாலும், அவர்களில் 20 சதவிகிதத்தினர்தான் பணக்காரர்கள், மற்ற 80 சதவிகிதத்தினர் ஏழைகள். ஆகவே 5 ரூபாய் கிஸ்தி செலுத்துபவர்களாக இருந்தாலும் ஒரு ரூபாய் கிஸ்தி செலுத்துபவர்களாக இருந்தாலும் அவர்களில் பணக்கார காரர்களாக இருப்பவர்கள் ஒரு சிலர்தான். அதற்காக 5 ரூபாய்க்கு மேல் கிஸ்தி செலுத்துபவர்களிடமிருந்து வரி வசூலிக்காமல் இருந்தால் கிராம மக்களுக்கு வசதி செய்துகொடுப்பதற்கு போதிய பணம் கிடைக்காது. 5 ரூபாய் கிஸ்தி செலுத்துபவர்கள் தங்கள் வசதிகளை ஒன்றுமேயில்லாத ஏழைகளுக்குப் பகிர்ந்துகொடுக்கவேண்டும். நம் நாட்டில் ஒரு சிலரைத் தவிர எல்லோருமே ஏழைகள்தான். ஏழைகளுக்கு வரி வேண்டியதில்லை என்றால், வசதியில்லாத எல்லோருக்கும் வசதி செய்துகொடுக்க முடியாது. 5 அல்லது 7 ரூபாய்க்குக் கீழே கிஸ்தி செலுத்துபவர்களுக்கு வரி போடக் கூடாதென்று சொன்னாலும் போதிய வருவாய் கிடைக்காது.

அடுத்தபடியாக, ஸ்ரீ கோதண்டராமன் அவர்கள் விளக்கிய கணக்கைக் கேட்டேன். அவர் இங்கே மட்டுமின்றி வேறொரு இடத்திலும் இந்தக் கணக்கைக் குறிப்பிட்டிருக்கிறார். எனக்குத் தெரிந்தவரையிலும் நான் போட்ட கணக்குத்தான் சரியாக இருக்கிறது. சரியான விடை ஒன்று தான் இருக்கும். தப்பான விடைகள் பல இருக்கும். என் கணக்குப்படி பஞ்சாயத்திறகு அதிக வருவாய் வரும். ஸ்ரீ கோதண்டராமன் அவர்களுடைய கணக்குப்படி பஞ்சாயத்திற்கு வருவாய் குறைவாகத்தான் வரும். ஆதலால் தான் ஸ்ரீ கோதண்டராமன் சொல்வதை நான் ஏற்றுக்கொள்ளவில்லை. பாலங்கள் கட்டுவது போன்ற வேலைகள் சர்க்காரால் காண்ட்ராக்டர்களிடம் ஒப்படைக்கப்படவேண்டாம் என்றும் அவைகளை பஞ்சாயத்துக்களே செய்யலாம் என்றும் ஸ்ரீ கோதண்டராமன் சொன்னார். சில பஞ்சாயத்துக்களில் அது சாத்தியமாக இருக்கும். சில பஞ்சாயத்துக்களால் அந்த வேலைகளை சரிவரச் செய்யமுடியாது. முடிந்த இடங்களில் பஞ்சாயத்துக்களே செய்யலாம். எனவே ஒரேயடியாக பஞ்சாயத்துக்களோ பஞ்சாயத்து யூனியன்களோ இந்த வேலைகளைச் செய்யவேண்டும் என்று மசோதாவில் கூற முடியாது. மேலும் டிபார்ட்மெண்டுகள் கட்டிய பாலங்கள் வீழ்ந்தால் அப்படிப்பட்ட பாலங்களைக் கட்டியதற்குப் பொறுப்பாளியார் என்று கண்டுபிடிக்க முடியாது. எங்கெங்கு முடியுமோ அந்தந்த இடங்களில், அதிகச் செலவு ஆகாமல் இருந்தால் அவர்களே நேரடியாகச் செய்யமுடியும். ஆகவே, ஒவ்வொரு வேலையையும் அனுசரித்து முடிவு எடுக்கவேண்டியதாக இருக்கிறது.

SRI A. GOVINDASAMY : இப்பொழுது பஞ்சாயத்து போர்ட் வேலைகளை சில கண்ட்ராக்டர்கள் எடுத்து நடத்துகிறார்களே, அதைப்பற்றி அரசாங்கம் என்ன கருதுகிறது ?

THE HON. SRI C. SUBRAMANIAM : சில இடங்களில் நன்றாக வேலை செய்கிறார்கள். சில இடங்களில் இப்படி செய்வதில்லை. அங்கு வேலை செய்யும் ஆட்களும் நம் மக்கள்தான். கண்ட்ராக்ட் எடுத்து வேலை செய்பவர்களும் நம் மக்கள் தான். அதிலும் பஞ்சாயத்து என்ற பெயரை வைத்துக் கொண்டு லாபம் சம்பாதிக்க வேண்டுமென்று வேலை செய்தால் வேலை மோசமாகப்போய் விடுகிறது. ஆகவே மக்களுக்கு நாணயம் எந்தளவு இருக்கிறதோ அந்தளவு வேலையில் தரமும் உயரும். மாற்றிப் போட்டு விடுவதால் நாணயம் உயர்ந்து விடாது. ஆகவே இங்கிருக்கக்கூடிய பல்வேறு திருத்தங்களும், ஏதோ தனிப்பட்ட ஒரு பகுதியை மட்டும் எடுத்து மாறுதல் செய்ய வேண்டுமென்று இருப்பதால் அதை சர்க்கார் ஒத்துக்கொள்ள முடியாமல் இருக்கிறது. போதிய அளவு பஞ்சாயத்துகளுக்கும், பஞ்சாயத்து கௌன்ஸில்களுக்கும் நிதி ஒதுக்குவதுடன், அவைகள் இன்னும் அதிக காரியங்களை செய்ய வேண்டுமென்று நினைத்தால் அவர்களுக்கும் இன்னும் ஓரளவு முயற்சி எடுத்துக் கொண்டு, வரி விதித்து அவர்கள் சௌகரியத்தை அதிகப்படுத்திக்கொள்ளும்போது அந்தளவு சர்க்காரும் உதவும்படி " மாச்சிங் கிறாண்ட் " (Matching Grant) வைத்திருக்கிறோம். எல்லாவிதமான வரிகளையும் நாம் போட்டு அவர்கள் கையில் அதைச் செலவு செய்யும் பொறுப்பை மாத்திரம் விட்டு விடுவதா? இல்லை அவர்கள் அதிகம் செலவு செய்ய வேண்டுமென்று வரும்போது அவர்கள் ஓரளவு வரி விதிக்கும் பொறுப்பையும் ஏற்றுக்கொள்ள வேண்டுமா என்பது தான் பிரச்னை. அதில், எது சரி என்பதை பற்றி எனக்கு சந்தேகமேயில்லை. ஆகவே, இந்த நிதித் திட்டத்தை அப்படியே ஒப்புக் கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

The amendments of Sri S. M. Annamalai and Sri V. K. Kothandaraman were put and lost.

The Government amendment was put and carried.

Clause 115, as amended, was put and carried.

29th September 1958]

*Clause* 116.

MR. SPEAKER : The motion is—

" That clause 16 dost and part of the Bill."

SRI S. M. ANNAMALAI : Sir, I move—

" *After* the words ' Land revenue ' *add* the words ' not less than five rupees '."

MR. SPEAKER : The amendment falls through for want of a seconder.

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I move—

" In clause 116, *for* the word ' tax ' *substitute* the words ' local cess '."

The amendment was put and carried.

Clause 116, as amended, was put and carried.

Clause 117 was put and carried.

*Clause* 118.

MR. SPEAKER : The motion is—

" That clause 118 do stand part of the Bill."

SRI N. K. PALANISAMI : Sir, I move—

"In the clause, *for* the words ' union council a sum . . . . . . of that block ', *substitute* the figure and words ' 25 per cent of the total revenue collected in that village '."

SRI N. MARUDACHALAM : I second the amendment, Sir.

MR. SPEAKER : The clause and the amendment are before the House for discussion.

SRI N. K. PALANISAMI : கனம் சபாநாயகர் அவர்களே, இன்றையதினம் பஞ்சாயத்துகளுக்கும், பஞ்சாயத்து யூனியன் களுக்கும் எந்த அளவிற்கு வருமானம் இருக்கிறது. நாம் சொல்லக் கூடிய விஷயங்களை எந்த அளவு செய்யும் என்பதை திட்டவட்டமாக கூறியிருக்க முடியும். ஏற்கனவே கிளாஸ் 2 பஞ்சாயத்தை எடுத்துக் கொண்டால் வீட்டு வரி போடவும், வேறு எவ்வளவோ வரிகள் போடவும் அதிகாரம் இருந்தும் கூட 25% பஞ்சாயத்துகளுக்கும் வரி போட கஷ்டமாகயிருக்கிறது. காரணம், அதிகப்படியான ஏழை மக்கள் இருக்கும் கிராமங்களில் சில வீடுகளுக்கு மட்டுந்தான் வரி போட முடிகிறதே தவிர பெரும்பாலான வீடுகளுக்கு வரி போடுவதில்லை. இங்கு சர்க்கார் கொடுத்திருப்பது. " ஹௌஸ் டாக்ஸ் " க்குக் கூட மாச்சிங் கிராண்ட் கொடுப்பதாக சொல்லியிருக்கிறார்கள். ஆகவே, சிறிய பஞ்சாயத்துகள் அதனால் எந்த வித பயன் அடையும் என்று சொல்ல முடியாது. ஸ்டாம்ப் ஆக்ட் பிரகாரம் ஒவ்வொரு கிராம பஞ்சாயத்திற்கும் வருடந்தோறும் குறிப்பிடத் தகுந்த வருமானம் வந்து கொண்டிருந்தது. ஆனால் இதைப் பொதுப் படுத்தி பஞ்சாயத்து யூனியன் பஞ்சாயத்துகளுக்கு பிரித்துக் கொடுக்கும் முறையில் சொல்லப்பட்டிருக்கிறது. ஹௌஸ் டாக்ஸ், லோக்கல் செஸ், சர் சார்ஜ் என்று மூன்று வரிகள் போட வேண்டுமென்று சொல்லப்பட்டிருக்கிறது. அப்படியானால் சர்க்காரும் ஓரளவு கொடுப்பதாக சொல்லியிருக்கிறார்கள். 11-30 a.m.

அவர்களுக்கு "ரெஸ்பான்ஸிபிலிட்டி " மட்டும் கொடுக்கும் போது சர்க்கார் அதிகாரங்களை மட்டும் கொடுக்க மறுத்து விட்டார்கள். வெல்லப் பிள்ளையாரைக் கிள்ளி அவருக்கு வெல்லம் நைவேத்தியம் செய்வது போல் தான் இருக்கிறது. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டப் பிரகாரம் பாப்புலேஷன் பேஸிஸில் எடுத்துக்கொண்டு, தனிப்பட்ட நபருக்கு இரண்டு ரூபாய் செலவு செய்யவேண்டும். இங்கு, ஒரு ரூபாய் தான் கொடுப்பதாக சொல்லியிருக்கிறார்கள். இந்த நிலையில் சாதாரண பஞ்சாயத்து போர்ட்டுகளுக்கு 200, 300 ரூபாய்க்கு மேல் வருமானம் வராது. இதை வைத்துக் கொண்டு எப்படி காரியங்களை நடத்துவது ? அதே போல் பஞ்சாயத்து கௌன்ஸிலை எடுத்துக்கொண்டால் அவர்களுக்கு எந்த அளவு இதனால் வருமானம் வரப் போகிறது என்று தெரியாது. ஆகவே, நான் சொல்வது, ஏற்கனவே, " கமிட்டி ஆன் ப்ளானிங் ப்ராஜெக்ட் ஸ்கீம்ஸ் " நிலவரியில் இருந்து 50% வரையில் கொடுக்கலாம் என்று சிபார்சு செய்திருக்கிறது. அந்த அடிப்படையை விட்டு விட்டு நிலவரியில் 25% யாவது பஞ்சாயத்து போர்டுகளுக்கு கொடுக்கவேண்டுமென்பதுதான் என் திருத்தம். இல்லையென்றால், நாம் சட்டமியற்றினாலுங்கூட அதைச் சரிவர அமுலுக்குக் கொண்டு வர முடியாது. ஆகவே, நிலவரியில் கால் பங்காவது பஞ்சாயத்து போர்டுக்குக் கொடுக்க வேண்டும். ஆகவே, இதை ஏற்றுக் கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

**SRI J. MATHA GOWDER :** இந்த நிலவரியில், பஞ்சாயத்து யூனியன்களுக்கு ஜனத்தொகை அடிப்படையில் தலைக்கு ஒரு ரூபாய் என்று கணக்கிட்டுக் கொடுத்தால், மலைப் பிரதேசங்களில் ஒரு ரூபாய் என்றால், எப்படி வேலை செய்ய முடியும் என்பதை நான் பலமுறை இந்த சபையில் எடுத்துச் சொல்லியிருக்கிறேன். சாதாரணமாக சமவெளிப் பிரதேசங்களில் ரோடு போடுவது அல்லது வேறு வேலைகள் செய்வதென்றால் குறைவான செலவில் செய்து விடலாம். ஆனால் மலைப் பிரதேசங்களில் மண்வெட்டி ரோடு வேலை செய்வதற்குக் கூட ஆயிரக்கணக்கான ரூபாய் செலவு ஆகும்போது கிராமப் பஞ்சாயத்தினிடம் தலைக்கு ஒரு ரூபாய் என்று கொடுத்தால் எப்படி வேலை செய்வது என்று புரியவில்லை. அதைப்பற்றி சர்க்கார் நன்கு சிந்தித்துப் பார்த்து மலைப்
11-40 a.m. பிரதேசங்களுக்கும் ஒரு ரூபாய் என்ற அடிப்படையை மாற்றி வேறு ஏதாவது ஒரு பரிகாரம் செய்ய வேண்டும். இல்லையென்றால் எந்த நோக்கத்தோடு நீங்கள் இதைப் போடுகிறீர்களோ அது சமவெளிப் பிரதேசங்களுக்குப் பொருந்தும். அவர்கள் இதனால் பயன் அடைய முடியும். ஆனால் மலைப் பிரதேசங்களில் இதனால் எந்த விதமான அபிவிருத்தியும் செய்ய முடியாது. ஆகவே, ஒரு ரூபாய் என்றிருப்பதை இரண்டு ரூபாய் என்றாவது அதிகப்படுத்தவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

**THE HON. SRI C. SUBRAMANIAM :** முதன் முதலாக, மாதா கௌடர் அவர்கள் நீலகிரியைப் பொறுத்த வரையில் சலுகைகளைக் கூட்ட வேண்டுமென்று சொன்னார்கள். அவர்களுக்கும் தலைக்கு ஒரு ரூபாய் என்று கொடுத்தால் போதுமானதாக இருக்காது என்று சொன்னார்கள். அந்த நிலையை உணர்ந்து இதைப் பரிசீலித்த கமிட்டியார் அதற்காக சிபார்சு செய்திருக்கிறார்கள் என்பதை அறிக்கையைப் படித்துப் பார்த்தால் தெரியும். இந்த பில்லில் உள்ள மற்ற ஷரத்துக்களைப் பார்த்தாலும் அது புலனாகும். முன்னேறியிருக்கும் பகுதிகள், பின்னடைந்திருக்கும் பகுதிகள் என்று, ஏ, பி, ஸி, டி என்று நான்காகப் பிரித்திருக்கிறார்கள். " டி ", ரொம்பவும் பிற்போக்காகவுள்ள பகுதி. அதில் 80% அதிகமாகக் கூடிய செலவை சர்க்கார் ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று சிபார்சு செய்திருக்கிறார்கள். மற்றயிடங்களில் 50%-ல் இருந்து ஆரம்பமாகிறது. ஆகையினால் பிற்போக்காக இருக்கும் பகுதிகளை எடுத்துக்கொண்டு அவைகளுக்கு அதிகமான சலுகை கொடுக்க வேண்டும் என்று ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. அடுத்தபடியாக கனம் அங்கத்தினர் பழனிசாமி அவர்கள் சொன்னதைக் கேட்டு ஆச்சரியமாக இருக்கிறது. கணக்குத் தெரியாமல் சில கருத்துக்களைத் தெரிவிக்கும் போது இந்த விதமாக இருக்கும் என்பது அவர்கள் சொன்னதிலிருந்து தெரிய வந்தது. அவர்கள் சொல்வது

29th September 1958] [Sri C. Subramaniam]

இப்போது ஒரு ரூபாய் என்று இருப்பதை எட்டு அணு என்று கொடுக்க வேண்டும் என்று சொல்லுகிறார்கள். இதனுல் அந்தப் பகுதியிலுள்ளவர் களுக்குக் கஷ்டங்கள் ஏற்படும். இந்தத் தொகை நில வரியிலிருந்து தான் கொடுக்கப்படுகிறது. இவ்விதம் கொடுக்கப்படுவதை பாதி கொடுத்தால் போதும், அதாவது 25% கொடுக்க வேண்டும் என்று சொன்னதற்குப் பதிலாக கூடுதலாக கொடுக்க வேண்டும் என்று கனம் அங்கத்தினர் அவர்கள் சிபாரிசு செய்திருந்தால் நல்லதாக இருந்திருக்கும். ஆகவே இப்போது ஒவ்வொரு இடத்திற்கும் தகுந்த விதத்தில் இவ்வளவு ரூபாய் கொடுக்க வேண்டும் என்ற அடிப்படையில் இந்த கிளாஸ் இருக் கிறது என்பதை இப்போதாவது கனம் அங்கத்தினர் அவர்கள் தெரிந்து கொள்வார்கள் என்று நம்புகிறேன்.

The amendment was, by leave, withdrawn.

Clause 118 was put and carried.

Clause 119 was put and carried.

*Clauses* 120 *to* 122.

MR. SPEAKER : The motion is—

"That clauses 120 to 122 do stand part of the Bill."

SRI A. GOVINDASAMY : கனம் சபாநாயகர் அவர்களே, உடனடியாக இதை நிறைவேற்றவேண்டாம் என்று நான் சொல்ல வர வில்லை. இதில் குறிப்பாக ஹவுஸ் டாக்ஸ் என்றிருப்பதில் கூரை வீடு களுக்கு இதிலிருந்து விதி விலக்கு அளிக்க வேண்டும் என்பது தான் என் வேண்டுகோள். இந்த ஷெட்யூலில் 100 சதுர அடிக்கு 3 அணு விலிருந்து 8 அணு வரைக்கும் கொடுக்க வேண்டும் என்றிருக்கிறது. இதைப்பற்றி பின்னல் பார்த்துக்கொள்ளலாம் என்று அமைச்சர் அவர் கள் சொல்லக்கூடும். இருந்தாலும் இந்த வரியில் 1 அணுவிலிருந்து 4 அணு வரைக்கும் கொடுக்க வேண்டும் என்று வைத்துக்கொள்ளலாம். மண் தீர்வை கூட கொடுக்க முடியாமல் இருக்கும் பல ஏழை விவசாயி களுக்கு இது மிக சௌகரியமாக இருக்கும், ஆகவே இவர்களுக்கு இந்த வரியிலிருந்து விதிவிலக்கு கொடுக்க வேண்டும் என்பது தான் என் நோக்கம்.

SRI M. S. SELVARAJAN : சபாநாயகர் அவர்களே, இதற்கு முன்பு, நான் தண்ணீர் தீர்வையை ஹவுஸ் டாக்ஸோடு சேர்க்க வேண்டும் என்கின்ற பிரச்னையை எழுப்பினேன். அதைப்பற்றி அரசாங் கத்தின் கருத்து என்ன என்டதை அமைச்சர் அவர்கள் தெரிவிக்க வில்லை. இப்போது வீட்டு வரி எவ்வளவு இருக்கின்றதோ அதே சத விகிதம் தண்ணீர் தீர்வையாகவும் கொடுக்க வேண்டியிருக்கிறது. அதாவது 50 கூடுதலாக கொடுக்க வேண்டும் என்று இருந்தால் 4 அணு வீட்டுவரி கொடுக்கக்கூடிய ஒரு ஆள் எட்டு அணு கொடுக்க வேண்டும். அதே நேரத்தில் 50 ரூபாய் வீட்டுவரி கொடுக்கக்கூடியவர்கள், தண்ணீர் தீர்வை 100 ரூபாய் கொடுக்க வேண்டியிருக்கிறது. இது மிகுந்த பார பட்சமானது. இவ்விதம் கொடுக்கக்கூடியவர்கள் பஞ்சாயத்துகளில் அதி கம் பேரைக் காண முடியாது. ஆகவே இதை மாற்றுவதற்கு ஒரு வழி இல்லையா என்பதைப்பற்றி முன்பே ஆலோசிக்கப்பட்டது. அரசாங்கமும் இதைப்பற்றி சர்ச்சை செய்து வந்திருக்கும் என்று நம்புகிறேன். ஆகவே இந்த முறையை மாற்றி அவரவர்களுடைய தண்ணீர் உபயோகத்திற்குத் தகுந்தபடி தீர்வை வசூலிக்கக்கூடிய ஒரு வழியைக் கொண்டு வர வேண்டும். அவ்விதம் இருந்தால்தான் பாரபட்சமில்லாமல் இருக்கும் என்று நினைக்கிறேன். ஆகவே இந்த முறையில் ஒரு வழியை வகுப்பார் கள் என்று நான் நினைக்கிறேன்.

[29th September 1958

SRI M. R. KANDASWAMI MUDALIYAR : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த வீட்டு வரி விஷயத்தில் பல தவறுகள் இப்போது நடந்துகொண்டிருக்கின்றன. இனிமேலாவது இவ்விதமான தவறுகள் நடைபெறுமல் இருப்பதற்கு வேண்டிய விதிகளைச் செய்ய வேண்டும் என் பதற்காகத் தான் இதைச் சொல்ல ஆசைப்படுகிறேன். வீட்டு வரி வசூலிப் பதற்கு அச்சிட்ட ரசீதுகள் பஞ்சாயத்துகளுக்கு வழங்கப்படுகின்றன. இது இன்ஸ்பெக்டர் ஆபீஸிலிருந்து கொடுக்கப்படுகிறது. முதலாவது 10 ரசீது களுக்கு இண்டண்ட் கொடுத்து வாங்குகிருர்கள். பின்னுல் மறுபடியும் 10 ரசீதுகள் வாங்குகிருர்கள். இவ்விதம் இரண்டாவது ரசீதின் படி வாங்குகின்ற வரிகளை கணக்கில் வரவு வைப்பதில்லை. பஞ்சாயத்து பிரஸி டெண்டோ அல்லது இதைப் பரிசீலனை செய்கின்ற அதிகாரிகளோ இதைச் சரியானபடி தணிக்கை செய்வதில்லை. இதற்கென்று சரியான விதத்தில் கணக்குகளோ புத்தகங்களோ இல்லாமல் இருப்பதினுல் இதைப்பற்றி ஒன்றும் கண்டு பிடிக்க முடியாத நிலையில் இருக்கிறது. சிலர் ரசீதைக் காட்டி நான் முன்னுல் வரி கொடுத்தாய் விட்டது என்று சொன்னுல் தான் அதை ஒப்புக்கொள்ளக்கூடிய முறையில் இருந்து வருகிறது. உதாரணமாக ஆட்டையாம்பட்டி பஞ்சாயத்தில் இவ்விதம் 200 ரசீதுகள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இவ்விதம் இருநூறு ரசீதிலும் கையெழுத்து போடப்பட்டிருக்கிறது. இந்த ரசீதுகள் எல்லாம் பஞ்சாயத்து ஆபீஸரிடம் ஒப்படைக்கப்பட்டிருக்கின்றன. ஆனுல் கணக்கில் இந்தப் பணம் வரவு வைக்க வில்லை. இதன் மூலம் சுமார் 4,000 ரூபாய் வரையிலும் மோசடி செய்யப் பட்டிருக்கிறது. இவ்விதம் டுப்ளிகேட் ரசீது போட்டுக் கொடுப்பவர்களின் மீது நடவடிக்கை எடுக்கலாம் என்றுல் சில சட்ட நிபுணர்கள் இவர்கள் பேரில் நடவடிக்கை எடுக்க முடியாது என்று சொல்லிவிடுகிருர்கள். ரசீதுகளில் பில் கலெக்டர் கையெழுத்து இருக்கும், சில ரசீதுகளில் பஞ் சாயத் பிரஸிடண்டின் கையெழுத்து இருக்கும். இவ்வாருக இருப்பதினுல் யார் இதற்கு உத்தரவாதம் என்பதை நிர்ணயம் செய்ய முடியாது என்று சொல்லிவிடுகின்றுர்கள். பஞ்சாயத்தின் ஸீல் இருந்தும் கூட இதன் பேரில் நடவடிக்கை எடுக்க முடியாது என்று சொல்லிவிடுகிருர்கள். இதனுல் அங்குள்ள மக்கள் பாதிக்கப்படுகின்றுர்கள். இதனுல் மக்கள் சர்க்காரின் பேரில் குற்றம் சொல்லுவதற்கு ஏதுவாகிறது. ஆகவே ரசீதில் யார் கையெழுத்து போட்டிருக்கிருர்களோ அவர்கள் அந்தப் பணத்திற்குப் பொறுப்பு என்கிற முறையைக் கொண்டு வரவேண்டும். அவ்விதம் இல்லா ததின் காரணமாகத்தான் இன்றைக்கு இவ்விதம் மோசடி செய்தவர்களின் பேரில் நடவடிக்கை எடுக்க முடியாமல் ஆகிறது. இதனுல் கிராம வாசிகள் மிகவும் வேதனையோடு இருந்து கொண்டிருக்கிருர்கள். இதை யாரிடத்தில் சென்று சொல்லுவது என்று தெரியாமல் இருந்து கொண்டிருக்கிருர்கள். ஆகவே வசூல் செய்யப்படுகிற பணத்திற்கு யார் ஜவாப்தாரி என்பதை நிர்ணயிக்க வேண்டும். ஆகவே இந்த விதியில் அழுத்தம் திருத்தமாக தவறு செய்கின்றவர்கள் யாராக இருந்தாலும் சரி, பில் கலக்டராக இருந்தாலும் சரி, பிரஸிடெண்டாக இருந்தாலும் சரி, யாருடைய கை யெழுத்து ரசீதில் இருக்கின்றதோ அவர்கள் பேரில் கடுமையான நட வடிக்கை எடுத்து தண்டனை கொடுப்பதற்கு வழி இருந்தால்தான் பொதுமக்களுடைய பணத்திற்குத் தகுந்த பாதுகாப்பு இருக்கும். ஆகவே இதற்குத் தகுந்த முறையில் விதிகளை அமைப்பதற்கு வேண்டிய திருத்தங் கள் செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : கனம் சபாநாயகர் அவர்களே, இது மாதிரி வரிவசூல் செய்வதிலே மோசடிகள் சில இடங்களிலே ஏற்படத்தான் செய்யலாம். அது ஏதோ பெருவாரியாக இருக்கிறது என்று எண்ண வேண்டியதில்லை. ஆட்டையாம்பட்டி விஷயத்தைப்பற்றி எனக்கு விவரங்கள் தெரியாது. சர்க்காரும் இதைக் கவனித்து, ஆட்டையாம்பட்டி போன்ற தனிப்பட்ட பஞ்சாயத்துக்களில் நடைபெற்றவைகளை நன்கு விசாரித்து, மற்ற இடங்களில் இது மாதிரி நடைபெறுமல் தடுப்பதற்கு வேண்டிய நடவடிக்கைகளை எடுக்கும். எவ்வளவு விதிகளைப் போட்டாலும், அவைகளையெல்லாம் மீறி எப்படி மோசடி செய்தார்கள் என்று கண்டு பிடித்து அந்த ஓட்டையை அடைத்தால், அதற்கும் அவர்கள் இன்னெரு

11-50 a.m.

29th September 1958] [Sri C. Subramaniam]

ஒட்டையை ஏற்படுத்திக்கொள்கிருர்கள். இது மனித இயற்கை. இதை வைத்துக்கொண்டு எல்லாமே மோசமாக நடந்துகொண்டிருக்கிறது என்று எண்ணக்கூடாது.

அடுத்தபடியாக கனம் செல்வராஜ் அவர்கள் தண்ணீர் வரியைப் பற்றி, குறிப்பிடும்போது அதை வீட்டு வரியையொட்டி வசூலிப்பதால் சில அநீதிகள் ஏற்படுகின்றன என்று சொன்னுர்கள். நீதி எது ? அநீதி எது ? என்றால் நாம் கொண்டிருக்கக்கூடிய கொள்கையைப் பொருத்தது இதிலுள்ள நீதியும் அநீதியும். நன்ருக வசதியுள்ளவர்களிடமிருந்து வரியை வசூலித்து, வசதியில்லாதவர்களுக்கெல்லாம் வசதி செய்து கொடுக்க வேண்டுமென்பதுதான் இப்போதுள்ள சமூக நீதி. பெரிய வீடு வைத்திருப்பவர்கள் நல்ல வசதியுள்ளவர்கள். பெரிய வீடு வைத்திருப்பவர்கள் நல்ல சொத்துடையவர்கள், ஆகையால் அவர்கள் தண்ணீருக்கும் ஒரு பகுதி, அதிக வரி கொடுக்க வேண்டும். அதே மாதிரி குறைவான வசதியுள்ளவர்கள், குறைவான சொத்துள்ளவர்கள், அவர்கள் 4 அணு செலுத்தினுலும், 2 அணு செலுத்தினுலும் போதும் என்று வைத்திருக்கிறோம். அவர்களால் அதற்கு மேல் கொடுக்க முடியாது. போதுமான வரி கொடுக்கவில்லை, அதனுல் தண்ணீர் கொடுக்க முடியாது என்ருல் அடிப்படையான சௌகரியங்களைக் கூட ஏழைகளுக்குச் செய்து கொடுக்க முடியாது. இந்த வரி விதிப்பதிலே நியாயம் இருக்கிறதா இல்லையா என்று பார்க்கும்போது இப்போது இருக்கும் சமூக நீதிக்கொப்ப இருக்கிறது என்று எனக்குத் தோன்றுகிறது. அதையும், மறுபடியும் கஷ்டங்கள் இருக்குமானுல் பரிசீலனை செய்து பார்க்கலாம்.

அடுத்தபடியாக கனம் கோவிந்தசாமி அவர்கள் சொன்ன யோசனை குடிசைகளுக்கு 3 அணுவிலிருந்து 8 அணு வரையில் என்றிருப்பதை 1 அணுவிலிருந்து 4 அணு வரை என்று போடவேண்டும் என்பது. இன்றைக்கு எவ்வளவு குறைவாக சம்பாதிப்பவராக இருந்த போதிலும், இந்த 3 அணு முதல் 8 அணு வரை என்று இருப்பது அவர் ஒரு சினிமாவுக்குக் கொடுப்பது கூட ஆகாது. அப்படி இருக்கும் போது வருஷத்திற்கு 3 அணு முதல் 8 அணு கொடுப்பது பெரிய பளுவாக இருக்காது என்று எனக்குத் தோன்றுகிறது. ஆகையால் 1 அணுவிலிருந்து 4 அணு வரை என்று போடவேண்டுமென்று வாதத்திற்கு வேண்டுமானுல் சொல்லலாமே தவிர, 3 அணுவிலிருந்து 8 அணுவரை என்று இருப்பதனுல் யாருக்கும் பளுவாக இருக்கும் என்று இந்தக் காலத்தில் ஏற்றுக்கொள்ள முடியாது.

SRI S.M. ANNAMALAI : ஆன் எ பாய்ன்ட் ஆப் இன்பர்மேஷன், ஸார், இந்த வரி போடுவதைப் பற்றி நிதி அமைச்சர் அவர்கள் சொன்னுர்கள் 3 அணுவிலிருந்து 8 அணு வரை கொடுக்கலாம் என்று. இப்போது 100 சதுர அடிக்கு 3 அணு முதல் 8 அணு வரை போடலாம் என்று இருக்கிறது; ஒரு சிறு வீடாக இருந்தாலும், அது 36 அடி நீளமும், 30 அடி அகலமும் இருக்க வேண்டும். அந்த வீட்டுக்கு ஏறத் தாழ ரூ. 4-2-0 கட்ட வேண்டிய நிலைமை இருக்கிறது. இப்போது கூட பெரிய பஞ்சாயத்துக்களில் ஏறத்தாழ அவர்கள் ஒரு ரூபாய் செலுத்தி வருகிருர்கள். இப்போது வரியை உயர்த்தி ரூ. 4-2-0 கொடுக்க வேண்டுமென்ருல் முடியாத காரியம். நான் இதைப் பற்றிய ஷெட்யூலுக்குத் திருத்தம் கொடுத்திருக்கிறேன். அப்போது அதைப் பற்றிப் பேசலாமென நினைக்கிறேன்.

MR. SPEAKER : அப்போது பேசிக் கொள்ளலாம்.

SRI M. S. SELVARAJAN : கனம் நிதியமைச்சர் அவர்கள் பதில் சொல்லும்போது வசதியுள்ளவர்கள் பெரிய வீட்டில் வாழ்வதாகச் சொன்னுர்கள். வசதி மிகுந்தவர்களே, குடிசை வீட்டில வசித்து இதிலிருந்து தப்பித்துக்கொள்ளவதற்கு வழியில்லையா ?

Clauses 120 to 122 were put and carried.

*Clause* 123.

MR. SPEAKER : The motion is—

"That clause 123 do stand part of the Bill."

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I move—

"In clause 123, *omit* '116 and'."

The clause will read ' . . . in pursuance of sections 119 to 122.'

The amendment was put and carried.

Clause 123, as amended, was put and carried.

*Clause* 124.

MR. SPEAKER : The motion is—

"That clause 124 do stand part of the Bill."

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I move—

"(i) In clause 124, *re-number* sub-clauses (3) and (4) as sub-clauses (4) and (3) respectively.

(ii) In the beginning of sub-clause (3) as re-numbered *insert* '(*a*)' and for the word 'panchayats' *substitute* 'village panchayats';

(iii) *after* sub-clause (3) (a) *add* the following :—

'(*b*) The amounts collected in any panchayat town as surcharge on the duty on transfers of property under this section, shall be credited to the town panchayat fund'."

SRI V. K. KOTHANDARAMAN : Sir, I move—

"In sub-clause (4) *for* the words 'land revenue', *substitute* the word 'population'."

The amendment was duly seconded.

SRI V. K. KOTHANDARAMAN : ஸார், இந்த நிலவரி எந்த அளவிற்கு வசூல் ஆகிறதோ, அதற்குத் தகுந்தாற்போல விநியோகம் செய்வதாக இதிலே இருக்கிறது. நான் கொடுத்திருக்கிற திருத்தம், ஒவ்வொரு கிராமத்திலேயும் ஒரே மாதிரியாக வசூல் ஆகும் என்று எதிர்பார்க்க முடியாது, கொஞ்சம் வசதி படைத்த கிராமத்திலே இருக்கக் கூடியவர்கள் அடிக்கடி நிலம் வாங்கிக் கொண்டேயிருப்பார்கள், அல்லது அடகு வைத்துக் கொண்டேயிருப்பார்கள், அதனால் அடிக்கடி கோர்ட்டு களிலே ரிஜிஸ்டர் ஆவதன் மூலமாக இந்த வரியினால் வருமானம் அதிகப்படியாக வரக் கூடிய கிராமமும் உண்டு, மிக மிகப் பின் தங்கி யிருக்கக்கூடிய பல கிராமங்கள் இருக்கின்றன, ஆகையால் ஒவ்வொரு கிராமத்திலேயும் உள்ள ஜனங்கள் வீதாசார அடிப்படையில் விநியோகம் செய்யப்படவேண்டும் என்பதாகும். ஆகவே எல்லா கிராமங்களிலும் இருக்கக் கூடியவர்கள் நம்முடைய சகோதரர்கள், நம் மக்கள் என்ற அடிப்படையில் இதை விநியோகிக்க கனம் அமைச்சர் அவர்கள் எனது திருத்தத்தை ஒப்புக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

29th September 1958]

THE HON. SRI C. SUBRAMANIAM : இந்தத் திருத்தத்தை ஒப்புக் கொள்ள முடியாததற்கு நான் வருந்துகிறேன். லாண்ட் ரெவின்யூவிலிருந்து கிடைக்கக்கூடிய வருமானம் பாபுலேஷன் பேஸிஸில் கொடுக்கப்படுகிறது. இங்கு டிரான்ஸ்பர் ஆப் பிராபர்ட்டி, அதாவது சொத்து விற்பதிலேயும், வேறு மாற்றுதல் செய்வதிலேயும் கிடைக்கக் கூடிய வரியை எப்படிப் பகிர்ந்து கொள்வது ? அங்கங்கே கிடைக்கக் கூடிய வரிகளை அங்கங்கே கொடுக்கக் கூடியது வழக்கம். இன்றைக்கு சேர்ந்து கொடுக்க வேண்டுமென்று எதற்காகச் சொல்லியிருக்கிறதென்றால், ஒரு வருஷத்திலே சில இடங்களில் நில மாற்றம் இருக்காது, சில இடங்களில் இருக்கும். வருஷா வருஷம் எவ்வளவு வருபடி வரும் என்று நிர்ணயிப்பது கஷ்டம். வருஷா வருஷம் ஓரளவாவது வரவேண்டும் என்று வரக் கூடிய வரியை ஒன்று சேர்த்துப் போட்டு, ஜனத் தொகை அடிப்படையில் இல்லாமல் வரி வசூல் தொகையை அடிப்படையாகப் பிரித்துக் கொடுக்க வேண்டுமென்று, வரி வசூல் எவ்வளவு இருக்கிறதோ, அந்த அளவு நிலப் பரப்பு இருக்கும், நில மதிப்பு இருக்கும், அங்கு ஆகக் கூடிய நில மாற்றங்களும் அதிகமாக இருக்கும் என்பதனால்தான் லாண்ட் ரெவினியூ என்று கண்டிருக்கிறது. அதையும் பைனான்ஸ் ஸப்-கமிட்டி பரிசிலனை செய்து இந்த விதியைப் போட்டிருக்கிறது. ஆகையால் கனம் அங்கத்தினர் கோதண்டராமன் அவர்களுடைய திருத்தத்தை ஒப்புக் கொள்ள முடியவில்லை.

The amendment of Sri V. K. Kothandaraman was put and lost.

The Government amendment was put and carried.

Clause 124, as amended, was put and carried.

Clause 125 was put and carried.

*Clause* 126.

MR. SPEAKER : The motion is—

"That clause 126 do stand part of the Bill."

SRI M. S. SELVARAJAN : இந்தப் பிரிவின்படி பஞ்சாயத்துகளில் வரி வசூலிக்கும் பொறுப்பை ரெவினியூ அதிகாரிகளிடத்தில் வழங்குகிறோம். இதுவரை பஞ்சாயத்துகளிலே இருக்கக்கூடிய ஆயிரக் கணக்கான சிப்பந்திகள் இந்த வேலையைச் செய்து வருகிறார்கள். பில் கலெக்டர்களும், இதர சிப்பந்திகளும் வேலை செய்து வருகிறார்கள். 12 noon. அவர்களுக்கு மாற்று வழி வகுக்க வேண்டியது அரசாங்கத்தின் பொறுப் பாகும். அரசாங்கம் அதைச் செய்யுமென்றும் நினைக்கிறேன். இவ்வளவு கமிஷன் தருகிறோம் என்ற அடிப்படையில் இந்த வரி வசூலிப்பை கிராம அதிகாரிகளிடத்தில் ஒப்படைப்பதானது இன்னும் அதிகமான உபாதை களுக்கு வழி வகுத்துவிடாதா என்பதை யோசிக்க வேண்டும். எவ்வளவுக் கெவ்வளவு அதிகமாக வசூல் செய்து கொடுக்கிறார்களோ, அவ்வளவுக் கவ்வளவு அவர்களுக்கு அதிகமாக கமிஷன் கிடைக்கும். கிராம அதிகாரி கள் இஷ்டப்படி வசூலித்துக் கொடுப்பதற்கு அதிகாரம் கொடுக்கிறோம். ஆனால் அவர்களைக் கட்டுப்படுத்துவதற்கு எங்கே அதிகாரம் இருக்கிறது ? எவ்வளவு அதிகமாக வசூலித்துக் கொடுக்கிறார்களோ, அவ்வளவு ரெவினியூ அதிகாரிகளிடத்தில் நல்ல பெயர் வாங்குகிறார்கள். அந்தக் கண்ணோட்டத்தோடு பார்த்தால் கிராமத்திலிருக்கக்கூடிய சாதாரண ஜனங் கள் எத்தனை கஷ்டங்கள் அனுபவிக்க நேரிடும் என்பதை அரசாங்கம் யோசிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். இத்தகைய நிலையில் கிராம அதிகாரிகளிடத்தில் வரம்பற்ற அதிகாரத்தைக் கொடுத்து, அவர் களுக்கு ருசியைக் காட்டி, வரி வசூலிப்பைக் கொடுத்து விடுவதன் காரண மாக இன்று நிலவரி அவர்களுடைய சம்பளத்தின் அடிப்படையிலேயே

வசூலிக்கப்பட்டு வந்தும், அதை வசூல் செய்வதிலேயே எவ்வளவோ கண்டிப்பாக இருக்கிறார்கள்—இன்னும் அதிகமான அளவுக்குக் கண்டிப்பான முறைகளைக் கையாளமாட்டார்களா என்பதை நாம் யோசிக்க வேண்டும். இப்பொழுது இருப்பவர்களுக்கு மாற்று வழிகளைக்காட்டி, வேறு துறைகளிலே அரசாங்கம் அவர்களை எடுத்துக்கொள்வதன் மூலமாக, அவர்களுடைய வேலையைப் போக்கி விடுவது என்று வைத்துக்கொண்டாலும், ரெவின்யூ அதிகாரிகளையும் ஒரு வரம்புக்கு உட்பட்டு, அவர்களும் கட்டுக்கு அடங்கி நடக்கும்படிச் செய்வதற்கு வழிவகை செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

SRI S. M. ANNAMALAI: இந்தப் பிரிவின்படி இனிமேல் கிராம அதிகாரிகளே வரி வசூலிப்பை ஆரம்பிப்பார்கள். பெரிய பஞ்சாயத்துகளிலே பில் கலெக்டர்கள் இருக்கிறார்கள். ஒரு பஞ்சாயத்துக்கு இரண்டு பேர்கள் இருக்கிறார்கள். அவர்களுடைய நிலைமை என்ன? வருங்காலத்தில் அவர்களை எப்படிப் பயன்படுத்தப் போகிறார்கள், வேலையை விட்டு நீக்கிவிடப் போகிறார்களா, 600 அல்லது 700 பேர்கள் வேலையை இழக்கக்கூடிய நிலைமை ஏற்படும், அவர்களுக்கு சர்க்கார் என்ன பாதுகாப்பு செய்து கொடுக்கப் போகிறார்கள் என்பதை அறிய விரும்புகிறேன்.

SRI J. MATHA GOWDER: இந்த பஞ்சாயத்து வரிகளை கிராம அதிகாரிகள் வசூல் செய்துகொடுக்க வேண்டுமென்பதையும், அவர்களுக்கு $6\frac{1}{4}$ சதவீதம் கமிஷன் கொடுக்கவேண்டுமென்பதையும் நாம் சற்று சிந்தித்து பார்க்கவேண்டும். இப்பொழுது கிராம உத்தியோகஸ்தர்கள் முழு நேர ஊழியர்களாகக் கருதப்படவில்லை. இப்பொழுது அவர்கள் Part-time ஊழியர்களாக இருக்கிறார்கள் சர்க்காருக்குச் சேர வேண்டிய நில வரியை வசூலிப்பதும், ஜனன மரணக் கணக்குகளை வைத்திருப்பதும், இன்னும் ரெவென்யூச் சட்டத்தில் வரையறுக்கப்பட்டுள்ள இதர வேலைகளையும் செய்து வருகிறார்கள். இப்பொழுது இந்தப் புதிய சட்டத்தின் பிரகாரம் அவர்களே இந்த பஞ்சாயத்து வரிகளை வசூல் செய்ய வேண்டுமென்று சொல்லுகிறோம். பஞ்சாயத்தில் விதிக்கப்படும் வீட்டுவரி, தொழில் வரி போன்ற வரிகளை மூன்று வருஷத்திற்குள் வசூலிக்க வேண்டுமென்று இருக்கிறது. அப்படி வசூல் செய்யாவிட்டால், அந்தத் தொகையை பஞ்சாயத்துத் தலைவரிடமிருந்து " ஸர்சார்ஜ் " என்ற பெயரில் வசூல் செய்து பஞ்சாயத்து பண்டில் சேர்க்கிறோம். கிராம அதிகாரிகளிடத்தில் இதை ஒப்படைப்போமேயானால், அவர்கள் மூன்று வருஷத்திற்குள் வசூல் செய்ய வில்லை என்று சொன்னால், இந்த ஸர்சார்ஜை யாரிடமிருந்து வசூல் செய்வது ? கிராம அதிகாரிகளிடமிருந்து ஸர்சார்ஜைப் போட்டு வாங்குவதற்கு, இந்தப் புதிய சட்டத்தில் ரெவின்யூ அதிகாரிகளைக் கட்டுப்படுத்துவதற்கு அதிகாரம் இல்லை. மேலும், இன்றைக்கு கிராம அதிகாரிகளுக்கு போதுமான சம்பளம் கொடுக்கப்படவில்லை, இன்னும் அதிகச் சம்பளம் கொடுக்க வேண்டும் என்ற கிளர்ச்சி இருந்து கொண்டிருக்கிறது. இந்த நிலைமையிலே, மேலும், அவர்கள் கையிலே அதிகமான வேலைகளை ஒப்படைத்து, இந்த வரியையும் வசூல் செய்ய வேண்டுமென்று சொல்வது உசிதமாக இருக்காது என்று நான் அபிப்பிராயப்படுகிறேன். தவிர, இன்றைக்கு வேலையிலே இருக்கும் பில் கலெக்டர்களுக்கு வேறு வழி செய்யவேண்டிய நிர்ப்பந்தம் இருக்கிறது. அதனால் வேலையில்லாத் திண்டாட்டம் ஏற்படும். அவர்களுக்கு வேறு வேலை கொடுப்பதாயிருந்தாலும், அவர்களுக்கும் சர்க்கார் சம்பளம் கொடுத்துத் தான் ஆகவேண்டும். அவர்களை வேறு வேலைக்கு மாற்றுவதற்குப் பதிலாக, இப்பொழுது நடைமுறையில் இருப்பது போலவே அவர்கள் பஞ்சாயத்தில் இருந்து கொண்டு, அவர்களே வரி வசூல் செய்வது தான் நல்லது என்று அபிப்பிராயப்படுகிறேன். அவசியப்பட்டால், அவர்கள் ஒப்புக்கொண்டால் கொடுக்கலாமென்று இருந்தால் பரவாயில்லை. கமிஷனரோ அல்லது எக்ஸிகூடிவ் ஆபீசரோ உத்தரவு போடலாமென்று சொன்னால், அதற்கு இடம் கொடுக்காது என்று நினைக்கிறேன். ரெவின்யூ சட்டத்தைத் திருத்தி இவர்கள் உத்திரவு போடலாம் என்று சொல்லலாம்.

29th September 1958] [Sri J. Matha Gowder]

அடுத்தப்படியாக, இந்த $6\frac{1}{4}$ சதவிகிதம் எப்படிப் பொருந்தும்? இன்றைக்கு தொழில் வரி, வீட்டு வரி, இவைகளை எடுத்துக் கொண்டால் ஒருவருக்கு 4 அணா அல்லது 5 அணாவிலிருந்து விதிக்கிறோம். ஒருவரிடம், போய் மணியக்காரர் 10 அணா வரி வசூல் செய்துகொண்டு வந்தால், 4 நயாப் பைசாவோ அல்லது 5 நயாப் பைசாவோ கமிஷன் கிடைக்கும். இந்த 5 நயாப்பைசாவுக்காக மணியக்காரர் வசூல் செய்வாரா என்பதை நாம் பார்க்க வேண்டும். ஆனால் பில் கலெக்டர்கள் எங்கே தங்களது உத்தியோகம் போய் விடுமோ என்று பயந்து கலெக்ஷன் செய்கிற முறை இன்று இருந்து வருகிறது. ஆகவே இதையெல்லாம் அரசாங்கம் யோசிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். கிராம அதிகாரிகள் இடத்தில் இந்த வரி வசூலை ஒப்படைப்பது சரியாக இருக்காது என்று நினைக்கிறேன்.

SRI A. GOVINDASAMY : இந்த வரி வசூல்செய்கிற அதிகாரம் Clerk *cum* Bill collector இடத்தில் இப்பொழுது ஒப்படைக்கப்பட்டிருக்கிறது. 12-10 p.m.
22-7-58 தேதியிட்ட எல்.எ. டிபார்ட்மென்ட் ஜி.ஓ. எம்.எஸ். நெ. 1125-ன்படி கிராம அதிகாரிகள் இந்த வரி வசூலிப்பைச் செய்வார்கள் என்று முன்னதாகவே போடப்பட்டிருக்கிறது. இந்த சட்டம் நிறைவேற்றுவதற்கு முன்னதாகவே, இந்த மாதிரி ஒரு சட்டம் நிறைவேறிவிடும் என்று நினைத்து, பஞ்சாயத்திலே யுள்ள பில்கலெக்டர்களை நீக்கிவிட்டு, அந்த இடத்திலே கிராம மணியக்காரரும் கணக்குப்பிள்ளையும் வரி வசூல் செய்வார்கள் என்று உத்திரவு அனுப்பப்பட்டிருக்கிறது. எப்படி மசோதா சட்டமாவதற்கு முன்னாலேயே, அது நிறைவேறிவிடும் என்ற உத்தேசத்தில், இந்த மாதிரி உத்தரவு பிறப்பிக்கப்பட்டது என்பதை அறிய விரும்புகிறேன். இதன் காரணமாக கிளார்க்-கம்-பில்கலெக்டர்கள் பல பேர்களின் உத்தியோகம் பாதிக்கப்படக் கூடும் என்பது ஒரு கருத்து. அது மாத்திரமல்ல. இப்பொழுது இருக்கிற கிராம அதிகாரிகள் அவர்களுக்கு இருக்கும் வேலைப் பளு அதிகமாக இருக்கும் காரணத்தினால் ரெவினியூ களத்தை வசூலிக்க முடியாத நிலைமையில் இருக்கிறார்கள். இதனால் தாசில்தார் அவர்கள் பேரில் அடிக்கடி நடவடிக்கை எடுக்கின்ற நிலைமை ஏற்படுகிறது. இப்பொழுது கிராம அதிகாரிகள் வசூல் செய்தால் அதன் பேரில் அவர்களுக்கு கமிஷன் கொடுக்கிறோம். வருமானத்திற்கு வழி செய்கிறோம் என்று சொல்லப் படலாம். கிராம அதிகாரிகள் சம்பள உயர்வு கேட்கிறார்கள். அதைத் தனிப்பட்டு செய்வதற்குப் பதிலாக, அவர்களுக்கு கமிஷன் கொடுப்பது இன்ஷூரன்ஸ் இன்ஸ்பெக்டருக்கு கமிஷன் கொடுப்பது போல் தான் ஆகும். இம்மாதிரி கமிஷன் கொடுப்பதால் அவர்கள் அதிக உற்சாகத்தோடு வேலை செய்வார்கள் என்று எதிர்பார்க்க முடியாது. சிறு சேமிப்பு நிதி வசூல் செய்வதில் கிராம அதிகாரிகளுக்கு கமிஷன் கொடுத்து அவர்களை உபயோகப்படுத்திக் கொண்டபொழுது, அவர்கள் பணக்காரர்களிடம் வசூல் செய்வதற்குப் பதிலாக சாதாரண மக்களிடம் வரி வசூல் செய்யும்பொழுது, வரிக்குப் பதிலாக இதை மாற்றம் செய்து கொடுக்கும் நிலைமை வந்தது. கணக்கு பிள்ளை, மணியக்காரர்கள் அதிகப்படியான ரிகார்டுகள் வைத்துக்கொள்வதில் பல சங்கடங்கள் ஏற்படும். எதற்காக வசூலானது, எந்தக் கணக்கில் வைத்துக்கொள்ளுவது என்றெல்லாம் சங்கடங்கள் ஏற்படும். ஆகவே, இந்த வேலையை முழு நேர பில்கலெக்டர்களிடம் ஒப்படைப்பதுதான் நலமாக இருக்கும். அவர்கள் வேலை செய்தால் 3, 4 கிராமங்களுக்குப் போய் வசூல் செய்வதற்கு வசதியாக இருக்கும். ஆகவே, ஏற்கனவே இருக்கும் தனிப்பட்ட கிளார்க்-கம்-பில்கலெக்டர்களிடம் இந்த வேலையை ஒப்படைக்க வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்கிறேன்.

SRI R. SRINIVASA IYER : Mr. Speaker, Sir, it may be pointed out with reference to clause 126 that it is only an enabling provision, giving power to require land revenue staff to collect taxes and fees due to panchayats. In the wording of the clause we find the expression 'the executive authority or the commissioner shall have power'. We have commissioners only in panchayat

union councils and town panchayats perhaps. I would suggest that there is no necessity to change the agency now employed for collecting the taxes. Ordinarily the assessing authority only collects the taxes. I do not find that any difficulty has been experienced by either the panchayats or the municipalities in collecting the taxes that they have imposed. Another important consideration for my making this suggestion is the experience we have of the Revenue Department defaulting in the collection of taxes. Income-tax amounting to lakhs of rupees has not been collected by the Revenue authorities. The method of collection of taxes levied by the panchayats, the municipalities and the district boards are entirely different from collection of land revenue. The collection of the taxes is now handed over from the Collector downwards to the village officers, that is the power has been handed over to the Revenue Department. What is the method to be adopted in the collection of these taxes by the Revenue Department? Will it be feasible to apply the provisions of the Land Revenue Recovery Act such as destraint and other such procedures? Who is the controlling authority in case the revenue official does not collect the taxes in time? If the revenue official does not collect the taxes in time, how are the panchayats to carry on with their slender resources? The panchayats will have to depend on these collections and if they do not collect in time, they will be left without finances. Therefore I suggest that the proper course would be to continue the existing provisions and make these collections by the bill collectors. Further no new provision has been made to absorb these bill collectors who will be replaced by the village munsiffs. There is the question of their grade, appointment, control and so on.

Then again there is the important question of control over these collections. Of course, the language of clause 126 indicates that they are merely collecting agents, commission agents. But supposing the village officer takes sides with one particular assessee and does not collect or reports that the assessee has no movable property, what is to happen? I know of cases where income-tax to the extent of Rs. 40 thousand and a lakh of rupees due from men living in palatial buildings were not recovered and the report of the village officer was that they had no movable property. The dues had not been collected for years together. We know of another recent case in which cinema actor escaped paying this tax to the extent of lakhs of rupees.

The proposal to entrust the collection work to the revenue officials as agents on payment of 6¼ per cent commission is not the proper course to adopt. Though I have not moved an amendment, I would suggest that Government themselves should bring forward an amendment to delete clause 126. The clause may be deleted altogether and the existing arrangement allowed to continue.

29th September 1958] [Sri R. Srinivasa Iyer]

The other point I would suggest is this. Power has been given under this clause to the revenue officials to collect taxes and fees due to the panchayats. But there are some taxes leviable by the panchayat union councils. Who is to collect those taxes? That point may be clarified. I would also suggest that in case Government want to retain clause 126, it may be split up into three parts, one for village panchayats, another for panchayat union councils and the third for town panchayats. Of course under the clause power is given to the revenue officials. Who the officials are may also be mentioned in the clause. Under the Revenue Recovery Act a certificate has got to be issued that a particular tax has to be collected. Then there is appeal. The certificate might be proved wrong. The procedure is such that it will only result in delay in the collection of dues to the panchayats. Therefore I suggest that the proper procedure would be to continue the existing method of collecting taxes through the agency of the bill collectors, that is the officers of the panchayats on the panchayat union councils as the case may be.

SRI M. K. SOMASUNDARAM : தலைவர் அவர்களே, இந்த வரி வசூலிக்கும் வேலையை கிராம முன்சீப்பிடம் ஒப்படைப்பதில் பல சங்கடங்கள் ஏற்படும். ஏனெனில், ஏற்கனவே அவர்கள் வசூலிக்க வேண்டிய வரிகள் வசூலிக்கப்படாமல் தாமதம் ஏற்பட்டு, பாக்கி கிடந்துகொண்டு வருகிறது. மேலும், அவர்களுக்கு பொறுப்பைக் கொடுப்பதனால், இன்னும் அதிக சங்கடங்கள் ஏற்படும் என்பது என்னுடைய எண்ணம். ஜில்லா போர்டுகளிலுள்ள லைசென்ஸ் இன்ஸ்பெக்டர்கள், பில்கலெக்டர்கள் இவர்களையெல்லாம் பஞ்சாயத்துகள் வந்தவுடன் வேலையிலிருந்து நீக்க வேண்டிய சந்தர்ப்பம் ஏற்பட்டிருக்கிறது. இந்த பில்கலெக்டர்களிடமே வரி வசூலிக்கும் பொறுப்பை ஒப்படைப்பது மிகவும் நலமாக இருக்கும் என்று நினைக்கிறேன். அவர்கள் வேலையிலிருந்து நீக்கப்படுவது என்றால் அது மிகவும் வருந்தத்தக்க விஷயம்தான். அவர்கள் தொழில் வரி முதலிய வரிகளை வசூலிப்பதில் ஏற்கனவே பழக்கப்பட்டிருப்பதால் அவர்களையே இந்த வரிகளையும் வசூல் செய்வதற்கு பஞ்சாயத்துகளிலும், கவுன்சில்களிலும் சேர்த்துக்கொள்ள வேண்டுமென்று சர்க்காரை நான் கேட்டுக்கொள்ளுகிறேன். லைசென்ஸ் இன்ஸ்பெக்டர்கள், ஸானிடரி இன்ஸ்பெக்டர் கோர்ஸ் பாஸ் செய்யாமல் இருந்தாலும், அவர்கள் வேலையிலிருந்து நீக்கப்படாமல், ஹெல்த் இன்ஸ்பெக்டர்களாக சேர்த்துக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். அவர்களுக்கு நேரடியாக ஹெல்த் இன்ஸ்பெக்டர்கள் போஸ்டு கொடுக்க வேண்டும். அப்படியில்லையெனில் கவுன்சிலில் லைசென்ஸ் வழங்குவதற்கு அவர்களுக்கு அதிகாரம் கொடுத்து கவுன்சிலில் ஒருவராக நியமிக்கும்படி அரசாங்கத்திற்கு யோசனை கூறுகிறேன். அதையும் நடைமுறையில் கொண்டுவந்தால் மிகவும் நலமாக இருக்கும் என்று நினைக்கிறேன். இருக்கக்கூடிய பில்கலெக்டர்களை திரும்பவும் இந்த இடங்களில் " கண்டினியூ " செய்ய வேண்டுமென்ற யோசனையை அரசாங்கம் ஏற்றுக்கொள்ளவேண்டுமென்று கேட்டுக்கொண்டு, இத்துடன் என் பேச்சை முடித்துக்கொள்ளுகிறேன்.

SRI A. R. SUBBIAH MUDALIAR : கிளாஸ் 126-ல் வில்லேஜ் ஆபீஸர்ஸ் அஸெஸ்மெண்டு ரிஜிஸ்டர் "மெயிண்டைன் " செய்யவேண்டுமென்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. அதிலும் " டிஸ்கிரீஷன் " கூட இல்லை. வரிகள் பூராவுமே பஞ்சாயத்து வசூல் செய்யக்கூடிய நிலைமை ஏற்பட்டால் வெறுப்ப பஞ்சாயத்துமேலே ஏற்படும். சிலவரிகளை நேராக பஞ்சாயத்துவசூல் செய்யும்பொழுது பஞ்சாயத்து சபைக்கோ, பஞ்சாயத்து தலைவரிடமோ வெறுப்பு ஏற்படுகிறது. இப்பொழுது என்ன செய்கிறோம்என்றால், பென்ச்கோர்டுக்கு அனுப்பி அவர்களமூலம் வசூல் செய்கிறோம். " டிஸ்கிரீஷன் "

[Sri A. R. Subbiah Mudaliyar] [29th September 1958

கொடுத்து "டிமாண்டு" மூலமாக வரக்கூடிய பாகத்தை மட்டும் வில்லேஜ் ஆபீஸர்ஸ் வசூல் செய்யக்கூடிய நிலைமை இருந்தால் நல்லது. அப்படியில்லாமல் அஸெஸ்மெண்டு ரிஜிஸ்டர் முதற்கொண்டு அவர்களே பிரிபேர் செய்து பூரா வரியும் வசூல் செய்யவேண்டுமென்ற நிலைமை ஏற்பட்டால் "டிமூயல்
12-20 p.m. கண்ட்ரோல்" ஏற்படுகிறது. கிராம அதிகாரிகள் இருக்கும் நிலையிலே, அவர்கள் படும் கஷ்டத்திலே, அவர்களுக்கு இருக்கும் பல பொறுப்பிலே, இந்த வேலையையும் அவர்களிடம் ஒப்படைத்தால் கஷ்டம் அதிகமாகும். அவர்கள் ஆறேகால் பர்செண்ட் கொடுப்பதற்காக வேலை செய்யப்போவதில்லை. தாசில்தார், தவிர அடுத்த வேறு எந்தஉத்தியோகஸ்த்தர்களுக்கும் கிராம அதிகாரிகள் மதிப்புக்கொடுப்பதில்லை. ஜமீன் பிரதேச தாசில்தார், கர்ணத்திற்கு ஒரு சம்மன் அனுப்பினால் அவர்கள் வர யோசிக்கிறார்கள். ஆகவே, அவர்களிடம் வரியைக் கொடுத்து வசூல் செய்வதில் கஷ்டம் ஏற்படும். பிரஸிடெண்ட் அல்லது பஞ்சாயத்து உத்தியோகஸ்தர் கொடுக்கும் டிமாண்ட் லிஸ்டைமட்டும், அவர்கள் வசூல் செய்ய வேண்டுமென்றிருந்தால் போதும். கிளாஸ் 126-ஐயே எடுத்து விடுவது நல்லது. அதைச் செய்ய முடியாவிட்டால், கொடுக்கும் டிமாண்டுக்கு மட்டும் வசூல் செய்யும்படி ஏற்பாடு செய்தால் போதுமானது.

THE HON. SRI C. SUBRAMANIAM : சபாநாயகர் அவர்களே, இது ஏதோ புது விதிபோல் நினைத்துக் கொண்டு எல்லா அங்கத்தினர்களும் பேசினார்கள். பழைய சட்டத்தின் 69-வது விதியைப் பார்த்தால், அதையேதான் இங்கே போட்டிருக்கிறோம் என்பது தெரியும். 'Subject to such rules as may be prescribed, the executive authority . . . . இங்கே "கமிஷனர்" என்று போட்டிருக்கிறோம்.

'Shall have power to require the village headman having jurisdiction over the village or any part thereof . . . ." இங்கே வார்த்தைக்கு வார்த்தை அப்படியே இருக்கிறது, கமிஷனர் என்பது தவிர. ஆகவே இது முன்பு இருக்கக் கூடிய விதியே தான்.

கனம் கோவிந்தசாமி இந்த விதி வரும் என்று மனதில் கொண்டு முன்பே சர்க்கார் உத்திரவு போட்டிருக்கிறார்கள் என்று சொன்னார்கள். அது அப்படியல்ல. முன்பே இருக்கும் சட்டப்படி உத்தரவு போடப்பட்டது. இப்பொழுது முடிவு செய்ய வேண்டியது என்னவென்றால், இம்மாதிரி ஒரு விதி வேண்டுமா, இல்லையா என்பது. அதை உபயோகிப்பதா, எப்படி உபயோகிப்பது என்பது இரண்டாவது விஷயம். இப்பொழுது, பல வரிகளும், நில வரியை அனுசரித்துப் போடவேண்டியிருக்கின்றன. ரூபாய்க்கு, 45 அல்லது 50 நயாபைசா வரை நிலவரியின்மேல், உபவரி போட்டு அதை வசூல் செய்வது எப்படி என்று தீர்மானிக்க வேண்டும். அதை நில வரியோடு சேர்த்து வசூல் செய்வதுதான் நன்மையாக இருக்கும். அதை வசூல் செய்ய என்று ஒரு பில் கலெக்டர் போடுவது அவ்வளவு சரியாகாது; கஷ்டமாக இருக்கும். அதற்காகத்தான், "any tax or any fee" என்று போட்டிருக்கிறது. அவர்களே எல்லா வரிகளையும் வசூலிக்க வேண்டுமென்பதில்லை. ஏதாவது வசூலிக்க வேண்டியிருந்தால், அவர்களிடம் போனால், அவர்கள் செய்யலாம். முக்கியமாக நில வரியை கிராம அதிகாரிகள் வசூல் செய்வது என்று இருந்தால், அதோடு சேர்த்திருக்கும் வீட்டு வரிக்கு மட்டும், தனியாக ஒரு உத்தியோகஸ்தர் போடமுடியாது. சிறிய பஞ்சாயத்துகளிலே, சிறிய வரியாக இருக்கக்கூடிய ஒன்றை அவர்கள் ஒப்புக் கொள்ளலாம். அவர்கள் ஒப்புக்கொள்ள வேண்டிய கட்டாயம் இல்லை. இந்த விதி இருப்பதால் கஷ்ட நஷ்டங்கள் ஏற்பட்டு விடும் என்பது சரியல்ல. ஒரு பக்கத்தில் கமிஷன் இருப்பதால், அவர்கள் ரொம்ப தீவிரமாக வசூல் செய்வார்கள், மக்களைக் கஷ்டப்படுத்துவார்கள் என்றார்கள். மறு பக்கத்தில் இந்த ஆறேகால் பர்செண்ட் இருப்பதால் ஒருவரும் வசூலிக்க மாட்டார்கள் என்றார்கள். (குறுக்கீடு) உங்களோடு சேர்ந்து இந்தப் பக்கத்து மெம்பர்களும் பேசினார்கள். ஆகையினால் இருக்கக் கூடிய முறையிலே, யாரிடத்தில் கொடுத்தாலும், சர்க்கார் ரூல்களுக்கு உட்பட்டு, சௌகரியப்பட்ட இடங்களில், அவர்கள் இஷ்டப்பட்டால் இதைச் செய்யலாம்.

29th September 1958] [Sri C. Subramaniam]

இன்னொன்றையும் சொல்ல விரும்புகிறேன். எல்லா பஞ்சாயத்து மகா நாடுகளிலும், "இந்தப் பொறுப்பு எங்களுக்கு வேண்டாம், ரெவின்யூ அதிகாரிகளிடமே கொடுத்து விடுங்கள்" என்று தீர்மானங்கள் நிறைவேற்றியிருக்கிறார்கள். வரி வசூல் செய்வது தங்களுக்குக் கஷ்டம் என்று தெரிவித்திருக்கிறார்கள். ஆகவே, இது ஒரு "enabling provision" ஆகப் போட்டிருக்கிறோம். சௌகரியம் இருக்கும் இடங்களில், ரெவின்யூ அதிகாரிகள், நம் சட்ட திட்டங்களுக்கு உட்பட்டு வரி வசூல் செய்ய வேண்டுமென்று போட்டிருக்கிறோம். இதில் இவ்வளவு ஆவேசத்துடன் பேச வேண்டியது அவசியமில்லை. இது வரை அம்மாதிரி முறையால் எந்த பாதகமும் ஏற்பட்டுவிடவில்லை. இனிமேலும் ஏற்படப் போவதில்லை. நில வரி தொடர்பு கொண்டிருக்கும் வரிகளை, ரெவின்யூ அதிகாரிகள் மூலமாகவும், மற்றவைகளை சௌகரியம் இருக்கும் இடங்களில் பஞ்சாயத்து மூலமாகவும், தனியாக உத்தியோகஸ்தர்களை நியமிக்கக்கூடிய இடங்களிலே, அந்த முறையிலேயும் செய்ய பரிசீலனை செய்யப்படும் என்ற உறுதியைக் கொடுக்க முடியும்.

இந்த சந்தர்ப்பத்திலே, இதன் மூலமாக ஏதாவது வேலையில் இருப்பவர்கள் வேலையிலிருந்து வெளியேற்றப் படுவார்களோ என்ற கவலை தெரிவிக்கப்பட்டது. இதிலே கிராம மக்களுக்கு நன்மை செய்யப் புறப்படும்போது, வேலையில் இருப்பவர்களுக்கு முதலில் இடம் செய்து விட்டுத்தான், அப்புறம் மற்றவை என்ற முறையில் சென்றால், நாம் கிராம மக்களுக்கு ஒன்றுமே நன்மை செய்ய முடியாது. அதிகாரத்தில் இருப்பவர்களுக்கு பாதிக்காமல் இடம் கொடுத்துவிட்டுத்தான் செய்ய வேண்டுமென்றால் ஒன்றும் ஆகாது. ஆனாலும், இங்கே நான் ஒரு உறுதியைக் கொடுக்க முடியும். இந்த அமைப்பினால், பில் கலெக்டர் போன்றவர்கள் பாதிக்கப்படமாட்டார்கள்.

SRI R. SRINIVASA IYER : Sir, section 69 of the old Act referred to 'village headman'. Now we have got the staff of the Land Revenue Department. Another point is that section 69 does not provide for the preparation of house-tax assessment register by the Land Revenue Department. Panchayats are doing it and that is the additional power. Of course, it is an enabling provision . . .

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, it is advisedly put there and it is an improvement on the existing section.

Clause 126 was put and carried.

Clauses 127 to 130 were put and carried.

*Clause* 131.

MR. SPEAKER : The motion is—

"That clause 131 do stand part of the Bill."

SRI S. M. ANNAMALAI : Sir, I move—

'*For* the figure and words "40 naye Paise" *substitute* the figure and words "50 naye Paise."'

SRI A. GOVINDASAMY : Sir, I second it.

MR. SPEAKER : The clause and the amendment are before the House for discussion.

SRI S. M. ANNAMALAI : இந்த பிரதேச சாலைகள் மானி யத்தை சர்க்கார், பஞ்சாயத்து யூனியனிலுள்ள ஒவ்வொரு நபருக்கும், ஜனநாயக அடிப்படையில், 40 நயா பைசா என்று ஒதுக்குகிறார்கள். அதை 50 நயா பைசாவாக உயர்த்த வேண்டும் என்று திருத்தம் கொடுத்திருக் கிறேன். சிறிய கிராமங்களுக்குள்ளே சென்றால், பாதைகள் செப்பனிடப் படுவதில்லை. கிராமப்புரங்கள் முன்னேறவேண்டும், முன்னேறவேண் டும் என்று சொல்லும் நாம், அவர்களுக்கு நல்ல பாதைகள், சாலைகள் செய்துகொள்ள சௌகரியமாக இந்த மானியத்தை அதிகப் படுத்திக் கொடுக்கவேண்டும். ஆகவே, என் திருத்தத்தை சர்க்கார் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று கேட்டுகொள்கிறேன்.

12-30 p.m. * SRI A. GOVINDASAMY : கனம் தலைவர் அவர்களே, 40 நயா பைசா என்று இருப்பதை 50 நயா பைசாவாக உயர்த்தவேண்டும் என்று கனம் அண்ணாமலை அவர்கள் சென்னார். ஆனால் கனம் நிதி அமைச்சர் அவர்கள் ரொம்ப உருக்கமாக என் 60 ஆகப் போடக்கூடாது என்று கேட்கிறார். அவருக்கு எப்பொழுதும் 60, 40 என்பதே ஞாபகத்திற்கு வருகிறது என்று நினைக்கிறேன். அதன் காரணமாகத்தான் அப்படி அவர் கேட்கிறார் என்று நினைக்கிறேன். நகரப்புரங்களுக்கு 60 நயா பைசா என்றும் கிராமப்புரங்களுக்கு 40 நயா பைசா என்றும் இருப்பதைத் திருப்பிப் போடவேண்டும் என்பதை நானும் வலியுறுத்துகிறேன். நகரப்பகுதிக்கு 60 என்று இருப்பதை 40 ஆகவும், கிராமப் பகுதிக்கு 40 என்று இருப்பதை 60 ஆகவும் மாற்றி அமைத்துக் கொள்ளவேண்டும் என்று கேட்டுக்கொள்ளுகிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : கனம் சபாநாயகர் அவர்களே, இதில் ஒரு கணக்கு இல்லாமலும் கொண்டு வரவேண்டிய அவசியம் இல்லை. அப்படிக் கொண்டு வருவதாக இருந்தால் ஒரு ரூபாய் என்றுகூட கொண்டு வரலாம். இப்பொழுது போடப்பட்டிருப்பதை நன்றாக பரி சீலனை செய்துதான் போடப்பட்டிருக்கிறது. சப் கமிட்டியில் பரிசீலனை செய்தபின் தான் அப்படி போடப்பட்டிருக்கிறது. பஞ்சாயத்து யூனியன் கவுன்சில் ரோடுகள் சம்பந்தப்பட்ட மட்டில் என்ன செலவாகும் என்பதை கணக்குப் போட்டு தான் இந்த 40 நயா பைசா என்று நிர்ணயித்திருக் கிறார்கள். கணக்கு இல்லாமல் போடப்பட்ட கணக்கு அல்ல அது. இன் றைக்கு நாம் பார்க்க வேண்டியது, டோல் காம்பென்சேஷன் என்று கொடுக்கப்பட்டபோது 16 நயா பைசா வீதம் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதை சராசரியாக வைத்துக்கொண்டு அதை 40 நயா பைசாவுக்கு உயர்த்தி இருக்கிறோம், இந்த "மசோதா" பிரகாரம். 16 நயா பைசா என்று கொடுத்தபோது டிஸ்ட்ரிக்ட் போர்டு எல்லா ரோடுகளையும் பரா மரித்து வந்தது. இப்பொழுதுள்ள திட்டத்தின் பிரகாரம் எல்லா ரோடு களும் அதாவது ஹைவேஸ்களெல்லாம் எடுத்துக் கொள்ளப்படுகின்றன. கிராம ரோடுகளை அதாவது மூன்றாவது க்ளாஸ் ரோடுகளையெல்லாம், பஞ் சாயத்து யூனியன் கவுன்சில்கள் எடுத்து பராமரிக்கப் போகின்றன. அத னால்தான் அந்த செலவைச் செய்வதற்கென்று 16 நயா பைசாவி லிருந்து 40 நயா பைசாவிற்கு உயர்த்தப்பட்டிருக்கிறது. எந்த அளவுக்கு உயர்த்த முடியுமோ அந்த அளவுக்கு உயர்த்தப்பட்டிருக்கிறது. புதிய ரோடுகள் போடுவதற்கும், ஏற்கெனவே இருக்கக்கூடிய ரோடுகளைப் பரா மரிப்பதற்கும் போதுமான பணம் வேண்டும் என்பதற்காகத்தான் இப்படி உயர்த்தப்பட்டிருக்கிறது. அதனால் நினைத்தபடி 40 அல்லது 50 என்று உயர்த்த வேண்டும் என்று சொல்வதில் அர்த்தம் இல்லை என்பதை மட்டும் தெரிவித்துக்கொள்ளுகிறேன். நிதி வசதி எந்த அளவிற்கு இருக்க வேண்டும் என்பதற்காகத்தான் அப்படி கணக்கு எடுக்கப்பட்டிருக் கிறது. அந்த அளவுக்குத்தான் ரோடு வசதிகளை அதிகப்படுத்தவேண்டும் என்பதை மனதில் வைத்துக்கொண்டு 40 என்று நிர்ணயம் செய்யப் பட்டிருக்கிறது. நிதி வசதிகளை நல்ல முறையில் பரிசீலனை செய்து பார்த்

29th September 1958] [Sri C. Subramaniam]

பிறகுதான் இது ஏற்பட்டிருக்கிறது. ஆகவே இப்பொழுது இருக்கக்கூடிய திட்டத்தில் எநத விதமான மாறுதலும் செய்யக்கூடாது என்பதாகக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

Clause 131 was put and carried.

SRI A. GOVINDASAMY : Sir, the amendment of Sri S. M. Annamalai has not been put to vote.

MR. SPEAKER : I am sorry about it. Is the hon. Member pressing his amendment?

SRI S. M. ANNAMALAI : Yes, Sir.

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, we can re-open clause 131.

I move—

"That clause 131 be reopened."

The motion was put and carried.

MR. SPEAKER : I shall now put the amendment to the vote of the House.

The question is—

'*For* the figure and words "40 naye paise" *substitute* the figure and words "50 naye paise".'

The amendment was put and lost.

Clause 131 was put and carried.

*Clauses* 132, 133 *and* 134.

MR. SPEAKER : The motion is—

"That clauses 132, 133 and 134 do stand part of the Bill."

SRI V. K. KOTHANDARAMAN : ஸார், இந்த 134-வது கிளாசில் பஞ்சாயத்து யூனியன், பட்டணப் பஞ்சாயத்து, பஞ்சாயத்து நிதி, கிராம பஞ்சாயத்து நிதி இவைகளுடைய நிதியை அமைக்கக்கூடிய விஷயத்தைப் பற்றி இங்கே குறிப்பிட்டிருக்கிறது. இந்த நேரத்தில் நான் சொல்லக் கூடியது என்னவென்றால் இப்பொழுது இருக்கக்கூடிய நிதி நிலைமையை பாதிக்கக்கூடிய அளவுக்கோ அல்லது அவர்களுக்கு இப்பொழுதுள்ள அதி காரம் பாதிக்கக்கூடாத அளவுக்கோ இருக்கவேண்டும் என்றும், அவர்களுக்கு இருக்கக்கூடிய அதிகாரம் பாதிக்கக்கூடிய அளவில் இருக்கக்கூடாது என் கிற நோக்கத்துடன் இருக்கவேண்டும். மேலும் அவர்களுக்கு அதிகப்படி யான நிதி நிலைமை உண்டாக்கப்பட வேண்டுமென்ற நோக்கத்துடன் இப்பொழுது ஒரு மசோதாவை உருவாக்கிக் கொண்டிருக்கிறார்கள். இது வரைக்கும் சினிமா போன்றவைகள் கிராமங்களில் நடந்து கொண்டு வந்தன. அந்த பஞ்சாயத்து எல்லைக்குள் நடந்து கொண்டிருந்த சினி மாக்களின் மூலமாக வரக்கூடிய வருமானம் எல்லாம் அந்த பஞ்சாயத் துக்கே கொடுக்கப்பட்டு வந்தது. இப்பொழுது பார்த்தால் சினிமா போன் றவைகளிலிருந்து வசூலிக்கக்கூடிய வரிப்பணம் அவ்வளவும் பஞ்சாயத்து யூனியன் கவுன்சிலுக்கு சேர்க்கப்படும் என்று இருக்கிறது. இது போன்ற நிலைமை இருக்கக்கூடாது. எந்த எந்த பஞ்சாயத்து எல்லைக்குள் வரு மானம் வருகிறதோ அந்த வருமானம் அந்த அந்த பஞ்சாயத்துக்குத் தான் சேர்க்கப்பட வேண்டும் என்பதை இந்த நேரத்தில் நான் ஞாபகப்

படுத்த விரும்புகிறேன். இதுதான் என்னுடைய அபிப்பிராயம் என்பதைச் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். ஆகவே கிராமப் பஞ்சாயத்தாக இருந்தாலும் சரி, டவுன் பஞ்சாயத்தாக இருந்தாலும் சரி, அந்த அந்த எல்லைகளுக்குள் நடைபெற்று வரக்கூடிய வருமானம் அந்த அந்த பஞ்சாயத்துக்கே கொடுக்க வேண்டும் என்ற அடிப்படையில் இருக்க வேண்டும் என்பதை தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

Clauses 132, 133 and 134 were put and carried.

*Clause* 135.

Mr. SPEAKER : The motion is—

' That clause 135 do stand part of the Bill.'

SRI N. K. PALANISAMI : Sir, I move—

In item (vii) *after* the words ' the contribution ' *add* the words and figures " of 50 per cent " and *omit* the words " on the scale fixed by the Government ".

The amendment was duly seconded.

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I move—

' In clause 135—

(*a*) *omit item* (iii) and *re-number* items (iv) to (xxii) as items (iii) to (xxi) respectively;

(*b*) *for* item (xx) as renumbered, *substitute* the following item :—

" (xx) fines and penalties levied under this Act by the panchayat union oouncil or at its instance or on its behalf ";

(*c*) *after* item (xxi) as renumbered, *add* the following item :—

" (xxii) all other moneys received by the panchayat union council ".'

The amendment of Sri N. K. Palanisami was put and lost.

The Government amendment was put and carried.

Clause 135, as amended, was put and carried.

Clause 136 was put and carried.

*Clause* 137.

MR. SPEAKER : The motion is—

' That clause 137 do stand part of the Bill.'

SRI P. VEERAPPA GOUNDER : Sir, I move—

' In entry (xiii), *add* the words " and avenue and other proceeds or the tank bunds and foreshores of the tanks ".'

The amendment was duly seconded.

29th September 1958]

SRI A. GOVINDASAMY : Sir, I move—

'*After* item (xxi), *add* the following, namely :—

" (xxii) Panchayat fund shall include house-tax, matching grant ".'

The amendment was duly seconded.

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I move—

'In clause 137—

(*a*) in item (i), *for* the word and figures " section 119 " *substitute* the words and figures " sections 119 to 122 ".

(*b*) *for* item (xx), *substitute* the following item :—

(xx) fines and penalties levied under this Act by the town panchayat or the village panchayat or at the instance or on behalf of either the town panchayat or the village panchayat."

(*c*) *after* item (xxi) *add* the following item :—

" (xxii) all other moneys received by the panchayat ".'

MR. SPEAKER : Now the clause and the amendments are before the House for discussion.

SRI P. VEERAPPA GOUNDER : சபாநாயகர் அவர்களே, 137-வது ஷரத்திலே 13-வது உட்பிரிவில், "கிராமத்தில் மீன்பிடி துறையிலிருந்து கிடைக்கும் வருமானம்" என்று சொல்லியிருப்பதோடு ஒட்டி அதில் இருக்கும் மரமகசூல், விழல், சம்பு, கோரை, இதர வருமானங்களும் பஞ்சாயத்து நிதியில் சேர வேண்டும் என்பது என்னுடைய திருத்தம். அந்த வருமானத்தையும் பஞ்சாயத்து நிதிக்குச் சேர்த்துக்கொள்ள வேண்டும் என்று நான் கேட்டுக் கொள்ளுகிறேன். 12-40 p.m.

SRI A. GOVINDASAMY : சபாநாயகர் அவர்களே, வீட்டு வரியையும் மாட்சிங் கிராண்டையும் பஞ்சாயத்து நிதியில் சேர்த்துக்கொள்ள வேண்டும் என்பது என்னுடைய திருத்தத்தின் நோக்கம். அதை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

SRI V. K. KOTHANDARAMAN : சபாநாயகர் அவர்களே, வண்டி வரி போன்ற வரிகளையும் எடுத்துக்கொள்வோமானால், இன்றைய பஞ்சாயத்துக்குப் பஞ்சாயத்து வித்தியாசங்கள் இருக்கின்றன. ஒரு பஞ்சாயத்திலே ஒரு ரூபாய் இருக்கும், இன்னொரு பஞ்சாயத்திலே இரண்டு ரூபாய் இருக்கும். இரண்டு ரூபாய் வரி இருக்கக்கூடிய பஞ்சாயத்து எல்லையில் இருக்கும் ஒருவர் ஒரு ரூபாய் வரி விதிக்கும் பஞ்சாயத்து எல்லைக்குப் போய் அங்கு லைசன்ஸ் பெற்றுக்கொள்கிறார். அப்படிப்பெற்றுக் கொண்ட போதிலுங்கூட, மேற்கொண்டு சேரவேண்டிய அந்த ஒரு ரூபாயை அந்தப் பஞ்சாயத்து வசூல் செய்ய முடியும் என்றும் சொல்லலாம். நான் எதற்குக் குறிப்பிடுகிறேன் என்று சொன்னால், இதிலே பல சிக்கல்கள் ஏற்படுகின்றன. பஞ்சாயத்துக்கு தரக்கூடியதிலே சர்க்கார் நல்ல கவனம் செலுத்தி அந்தக் குறிப்பிட்ட லைசன்ஸ் பெறக்கூடியவர் எந்த பஞ்சாயத்து எல்லையில் இருக்கிறாரோ எங்கே போய் லைசன்ஸ் வாங்கினாலும் வசூல்செய்து அந்தப் பஞ்சாயத்துக்கு ஒப்படைக்கும் அளவுக்கு இதன் விதி திருத்தியமைக்கப்படவேண்டும். அது போன்று, எந்த பஞ்சாயத்து எல்லைக்குள் இருக்கிறதோ அங்கே உள்ள வண்டிகளுக்கும் மற்ற மற்ற வாகனதிகளுக்கும் லைசன்ஸ் பெற முடியும். அந்தப் பஞ்சாயத்துக்கும் வருமானம் கிடைக்கக்கூடிய நிலைமை இருக்கக்கூடும். ஆகவே, இதுபோன்ற நிலைமை இருக்கும் காரணத்தால் தான் அதுபோன்ற ஒரு கட்டணத்தை நிர்ணயிக்கக்கூடிய நிலைமை

இல்லாத காரணத்தால், இதுபோன்ற முறைகள் கையாளுவது சம்பந்தமாக அவர்கள் வேறு பஞ்சாயத்துக்குப் போய் வாங்கக்கூடிய நிலைமை இருக்காது என்னும் அபிப்பிராயத்தை நான் தெரிவித்துக் கொள்கிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : கனம் சபாநாயகர் அவர்களே, ஸ்ரீ வீரப்ப கவுண்டர் கொடுத்திருக்கும் திருத்தமும், மற்றும் கனம் அங்கத்தினர்கள் இந்த ஷரத்துக்குக் கொடுத்திருக்கும் திருத்தங்களும் சர்க்கார் கொடுத்திருககும் திருத்ததவதை ஏற்றுககொண்டால் அதிலே வந்துவிடும் என்று நான் நினைக்கிறேன். இந்த ஷரத்தின் 19-வது உட்பிரிவில் ": Income from leases of Government property obtained by the panchayat ;" என்றும், 17-வது உட்பிரிவில் " all income derived from porambokes the use of which is vested in the panchayat ;" என்றும் கண்டிருக்கிறது. ஆகவே, கிராமப் பஞ்சாயத்தினுடைய ஆதிக்கத்தின்கீழ் வருமானல் அதன்கீழ் எல்லாம் வந்துவிடும். அதன் ஆதிக்கத்தின்கீழ் வராத வேறு எந்தவிதமான வரும்படிகளும் இதில் வரவேண்டும் என்று எதிர்பார்க்க முடியாது. எந்தச் சொத்து பஞ்சாயத்தினுடைய ஆதிக்கத்தின் கீழ் இருக்கவேண்டும் என்று சர்க்கார் உத்தரவிடுகிறதோ அதன் மூலம் வரும வரும்படி முழுதும் பஞ்சாயத்தின்கீழ் வந்துவிடும்.

* SRI A. GOVINDASAMY : சபாநாயகர் அவர்களே, கனம் அங்கத்தினர் வீரப்ப கவுண்டர் அவர்கள் சொல்லுவதுபோல், குளத்தில் மீன் பிடிக்கும் நிலைமை, விழல் முதலிய எடுககும் நிலைமையைப்பற்றி அந்தந்த பஞ்சாயத்துக்கு உரிமை இருக்கவேண்டும். அந்தக் குளத்தில் இருக்கும் விழல் வருமானத்தை பஞ்சாயத்து அனுபவிக்கவேண்டும். அப்படியல்லாத நிலைமையில் விழல் சம்பந்தமாக பல தகராறுகள் கிராமங்களில் இருப்பதால்தான் கனம் அங்கத்தினர் வீரப்ப கவுண்டர் அவர்களுடைய திருத்தத்தை அவசியம் ஏற்றுக் கொள்ள வேண்டுமென்று நானும் கேட்டுக்கொள்கிறேன்.

The amendment of Sri P. Veerappa Gounder was put and lost.

The amendment of Sri A. Govindasamy was, by leave, withdrawn.

The Government amendment was put and carried.

Clause 137, as amended, was put and carried.

Clauses 138 and 139 were put and carried.

*Clause* 140.

MR. SPEAKER : The motion is—

" That clause 140 do stand part of the Bill ".

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I move—

" In clause 140, *after* sub-clause (4), *add* the following sub-clauses :—

' (5) On or before such date in each year as may be prescribed, every commissioner shall submit to the Government through such officer and in such forms as may be prescribed a budget for the ensuing financial year showing the income and expenditure relating to the panchayat union (education) fund.

(6) The Government may pass such orders as they think fit in respect of the budget referred to in sub-section (5) and the panchayat union council concerned shall be bound to carry out all such orders.

29th September 1958] [Sri C. Subramaniam]

(7) The accounts of the panchayat union (education) fund shall be examined and audited by an auditor appointed by the Government under section 141, and the panchayat union council concerned shall carry out any instructions which the Government may issue on the audit report.' "

The amendment was put and carried.

Clause 140, as amended, was put and carried.

Clauses 141, 142 and 143 were put and carried.

MR. SPEAKER : The House will now rise for lunch and meet again at 3 p.m.

The House then adjourned for lunch.

**[After lunch—3 p.m.]**

IV.—GOVERNMENT BILLS—*cont.*

(1) THE MADRAS DISTRICT BOARDS (AMENDMENT) BILL, 1958.
(L.A. BILL NO. 36 OF 1958)—*cont.*

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : Mr. Speaker, Sir, I move :

'That the Madras District Boards (Amendment) Bill, 1958 (L.A. Bill No. 36 of 1958) be taken into consideration.'

Sir, last year I presented the Madras District Boards (Amendment) Bill, 1957, before the Legislature. According to that Bill, the elections to the district boards were postponed till the 31st of October 1958 and Special Officers were placed in charge of the district boards. We have now introduced the Madras Panchayats Bill, 1958, which makes permanent provision regarding the abolition of the district boards and their replacement by panchayat union councils. This replacement is to take place according to a phased programme which will be completed on the 2nd October 1961.

During this period successive batches of panchayat union councils will be constituted. As soon as they are constituted the functions performed by the Special Officers will devolve upon them and the District Boards Act will be repealed in their areas. But until this programme is completed, there will be need for the continuance of the Special Officers in the areas where panchayat union councils are not yet set up.

Anticipating this contingency we have made provision in clause 196 of the Madras Panchayats Bill. We hoped that this Bill would have become law before the 31st October 1958. But it now appears that according to the programme of this House and the other House, this may not be possible. We are advised that if the Bill becomes law after the 31st October 1958, there will be a gap during which period the proceedings of the Special Officers will have to be validated.